# வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி



புலவர் கா.கோவிந்தனார்

எழிலகம் வெளியீடு: எண் : 12
முதற்பதிப்பு: நவம்பர் 1991
விலை. ரூ. **15**

வெளியீடு :

**எழிலகம்**
46, செல்வ விநாயகர் கோயில் தெரு,
திருவத்திபுரம் (செய்யாறு)
திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம்,
604 407.

கிடைக்குமிடம் :

***17/12, பீட்டர்ஸ் சாலைக் குடியிருப்பு,***
இராயப்பேட்டை, சென்னை—600 014.

அச்சிட்டோர் :

***கமலம் பிரஸ்,***
காஞ்சிபுரம்—631 502.

# பதிப்புரை

இருபதாம் நூற்றாண்டு தமிழகத்தின் வரலாற்றில், தனக்கென ஒரு சிறப்பிடத்தைப் பெறத்தக்கவகையில், நல்ல தமிழ் அறிஞராக, வரலாற்றுத் திறனாய்வாளராக, செந்தமிழ்ப் பேச்சாளராக, இலக்கியப் படைப்பாளராக, பாதைமாறாத பகுத்தறிவுவாதியாக, அப்பழுக்கற்ற அரசியல் தலைவராக, சட்டமன்றப் பேரவைத் தலைவராக என பல்திறன்படைத்த நற்றமிழ்ப் புலவராய் விளங்கியவர் புலவர். கா. கோவிந்தனார் அவர்கள்.

"தமிழுக்கும், தமிழ்ப்புலவர்கட்கும், தமிழ் நாட்டுக்கும், தொண்டாற்றத் தன்னையே அர்ப்பணித்தவர்" என்று பேரறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டப் பெற்ற பேறு பெற்றவர். பைந்தமிழ் வல்ல புலவராய் உயர்ந்து, சங்கத் தமிழ் ஏடுகளிலெல்லாம் திளைத்து, வரலாற்றுக்கண் கொண்டு ஆய்ந்து, தொல் காலத்தமிழர் வாழ்வை இக்காலத்தவரும் தெளிந்திடுமாறு தேன்தமிழ்ச்சுவடிகளாக வரைந்து வழங்கிய பெருமை உடையவர் புலவர் கோவிந்தனார் அவர்கள்.

புலவர்களுள் புலவராய் விளங்கி, திருவண்ணாமலை குன்றக்குடி ஆதினத்தாரின் "புலவரேறு" பட்டம், தமிழக அரசின் "திரு. வி. க. விருது," மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் "தமிழ்ப்பேரவைச் செம்மல்" பட்டம், போன்ற சிறப்புகளைப் பெற்ற புலவர் அவர்களது தமிழ்ப்பணி பொன் விழா கண்டது சிறப்பினையுடையது.

''என் தமிழ்ப்பணி'' என்ற தலைப்பில் புலவர் அவர்கள் எழுதிய கட்டுரையில் ''என் எழுத்துப்பணி தொடரும். குறள்பற்றி, சங்க இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன், ''கல்விகரையில, கற்பவர் நாள் சில'' காலம் இடம் தந்தால் என் எழுத்துப்பணி ஓரள வேனும் முற்றுப்பெறும்'' என்று தம் தமிழ்ப் பணியைத் தொடர வேண்டும் என்ற தணியா ஆவலை வெளியிட்டுள்ளார். ஆனால் காலம் இடம் தரத்தவறிவிட்டதனால் முற்றுப் பெறாத நிலையிலேயே அவருடைய எழுத்துப்பணி எச்சமாகவே நின்று போயிற்று காலம் செய்த கொடுமை அது!

தமிழால் உயர்ந்து, தம் தமிழ்ப் பணிமூலம் தமிழுக்கும் உயர்வு தேடித் தரும் வகையில், எழுத்துலகம் நினைவு கொள்ளும் வண்ணம் நூற்பணியாற்றிய புலவர் அவர்கள், 'செத்தும் பொருள் கொடுத்த சீதக்காதி வள்ளல்' போல, தம் மறைவிற்குப் பின்னும் தமிழுக்கு அணிசெய்யும் வகையில் பல இலக்கியப் படைப்புகளைத் தம் கையெழுத்து வடிவிலே அளித்துச் சென்றுள்ளார்.

அந்த எழுத்துச் சுவடிகளை யெல்லாம் அச்சுவடிவில் வெளியிடுவதைத் தன் தலையாய கடமையாக எழிலகம் ஏற்று அதன் முதற் கட்டமாக **வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி** என்ற இந்தநூலை தமிழ்கூறு நல்லுலகத்தின் முன் படைக்கிறோம்.

''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே''

என்ற புறநானூற்று மொழிகளுக்கேற்ப, புகழுடம்பு பெற்றுவிட்ட புலவர் பெருந்தகை இறவாத புகழுடைய இலக்கியங்கள் பலவற்றைத் தமிழன்னைக்கு அணி செய்ய அளித்து விட்டுச் சென்றுள்ளார். புலவர் அவர்களின் முன்னைய படைப்புகளுக்குத் தமிழகத்துப் பெரியோர்களாகிய தாங்கள் காட்டிய பேரன்பையும், பாராட்டையும், ஆதரவினையும் தொடர்ந்து அளித்திட வேண்டுகிறோம்.

''தமிழுக்குத் தொண்டு செய்வார் சாவதில்லை'' என்றார் பாவேந்தர். தம் வாழ்நாள் முழுவதும், காலம் கரம்பிடித்து அழைத்துப்போன அந்தக் கடைசி நொடிவரை, தமிழ்ப்பணி ஆற்றிய புலவர் வாழ்வார்! அவர் தமிழ் உலகிற்கு அளித்துள்ள இலக்கியச் செல்வங்கள் உள்ளவரை என்றென்றும் நிலைத்து வாழ்வார்! தமிழ் படிப்போர் நெஞ்சமெல்லாம் நிறைந்து வாழ்வார்! என்பது உறுதி.

எழிலகம் பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

—O—

**பதிப்புரை:**



**இணைப்புகள்:**

# வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி

## அ. சொல் இலக்கணம்.

உலகில் நனிமிகச் சிறிய பொருள் அறிவியல் வளராத வரை கடுகு, அறிவியல் வளர்ந்து விட்டநிலையில் அணு. அளக்கலாகா ஆழமும் பரப்பும் உடையது கடல். ஒரு கடலின் வரப்பும் ஆழமுமே அத்தகையது என்றால் ஏழு கடல்கள் ஒன்று கலந்து விட்ட நிலையில் அவற்றின் ஆழமும், பரப்பும் அம்மம்மா! எண்ணிப் பார்க்கவும் இயலாதனவாம். அவ்வேழு கடல்களையும் கடுகு ஒன்றைத் துளைத்து, அதன் அகத்தே அடக்குவது அதனினும் அணுவை துளைத்து, அதனகத்தே அடக்குவது அரிதினும் அரிது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

திருவள்ளுவர் இயற்றிய குறட்பா ஒவ்வொன்றின் அளவுச் சிறுமையும், அதகூறும் பொருட் பெருமையும் அக்குறட்பாக்களை அறிந்த புலவர் பெருமக்களைக் "கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுக தறித்த குறள்" என்றும், "அணுவைத் துளைத்து, ஏழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்தக் குறள்" எனறும் பாராட்ட வைத்துவிட்டன.

அவ்வாறு பரந்த பொருளை சுருங்கிய வாய்ப்பாட்டால் கூறுவதால் பெருமை கொண்ட வள்ளுவப் பெருந்தகையார், சொல் இலக்கணத்திற்கு மட்டும்,

1) அவை அஞ்சாமை 2) அவை அறிதல் 3) இனியவை கூறல் 4) கேள்வி 5) சொல்வன்மை 6) பயனில சொல்லாமை 7) புறங்கூறாமை 8) வாய்மை என்ற அதிகாரங்களை—அதாவது, எண்பது குறட்பாக்களை ஒதுக்கி

யிருப்பதோடு, சொல் குறித்து, பல்வேறு இடங்களில் பல்வேறு நிலைகளில் 33 குறட்பாக்கள் யாத்துள்ளார்.

இவ்வாறு சொல்லிலக்கணத்திற்காக 113 குறட்பாக்களை - அதாவது, தம் முழுநூலின், சற்று குறைய பன்னிரண்டில் ஒரு கூற்றினை ஒதுக்கி இருப்பதன் மூலம் சொற்களைத் தேர்ந்து ஆள்வதில் எத்துணை விழிப்பாய் இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்தியுள்ளார். இவ்வாறு வற்புறுத்தும் அவர், அவ்வழியில் சொற்களை ஆளாதிருப்பாரோ? "ஓதி உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும் தான் அடங்கா பேதையர்" அல்லரே அவர்! ஆகவே உரைத்த வழியே சொற்களைத் தேர்ந்து ஆண்டிருப்பார்; ஆண்டுள்ளார்.

திருவள்ளுவர் தாம் இயற்றிய ஆயிரத்து முந்நூற்று முப்பது குறட்பாக்களையும் இன்ன சொல்லை எடுத்து விட்டு. அதன் இடத்தில் இன்ன சொல்லைப் போட்டால் பொருத்தமாக இருக்கும் என எவரும் எண்ணவும் இயலாநிலையில், அப்படியே மாற்றிப் போட்டால், அக்குறட்பாவின் பொருட் செறிவே சீர்குலைந்து போகும் வகையில் வடித்து, தந்துள்ளார். எடுத்துக் காட்டுக்கு ஒரு பாட்டு:

> 'ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்.
>
> —குறள் 69.

இக்குறட்பாவில், 'ஈன்ற, பொழுது, இன், பெரிது, உவக்கும், தன் மகனைச் சான்றோன் என கேட்ட தாய்' எனப் பதினோரு சொற்கள் உள்ளன; இனி அவை ஒவ்வொன்றின் இயல்பினையும் ஆராய்வோம்.

ஈன்ற:

" நன்கலம் நன்மக்கட் பேறு " (குறள்: 60) " அறிவறிந்த மக்கட் பேறு" (குறள்: 61) என்ற குறட்பாக்களை

யும் "பேறுகாலம்", "பெற்றவட்கே தெரியும் பிள்ளையின் அருமை", "பெற்றால் தான் பிள்ளையா" என்ற உலக வழக்கையும் கருத்தில் கொண்டு நோக்கிய வழி "ஈன்ற" என்ற சொல்லிற்குப் பதிலாகப் "பெற்ற" என்ற சொல்லைப் போட்டிருக்கலாம் என எண்ணத் தோன்றும், ஆனால் அதை போடவில்லை. காரணம்; இருசொற்களுக்கும் உள்ள பொருள் நிலையே! "நல்லாறு எனினும் கொளல் தீது; மேல் உலகம் இல் எனினும் ஈதலே நன்று" என்பது (குறள்: 222) "கொள்வது தீது கொடுப்பது நன்று" (கம்பராமாயணம்) வாணன் வைத்த விழுநிதி பெறினும் "நமக்கு எழுக என்னாய்; விழுநிதி ஈதல் உள்ளமொடு இசை வேட்டுவையே" (மதுரைக் காஞ்சி 203-205) "புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்; பழிஎனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்", (புறம் 182)

இச்சான்றோர் வாக்குகள், கொள்வார் சிறியர்; கொடுப்பார் பெரியர் என்பதை உறுதிச் செய்கின்றன. ஆகவே, பெற்ற என்ற சொல்லைப் போட்டால், தாய் சிறுமையுடையவளாகி விடுகிறாள். வள்ளுவர், அச் சிறுமையைத் தாய்க்குச் செய்ய விரும்பவில்லை. சிறுமை செய்ய விரும்பாமை மட்டுமன்று; ஈன்ற என்ற சொல்லை அமைத்ததன் மூலம் தாயின் பெருமையை மேலும் காட்டியுள்ளார். "ஈ என் கிளவி இழிந்தோன் கூற்றே" (தொல். சொல். 439) என்பது தொல்காப்பியம்; அதாவது கொடுப்போர் - உயர்ந்து, கொள்வோர் தாழ்ந்த வழி; தாழ்ந்தோர் உயர்ந்தோரைப்பார்த்து ஏதேனும் கேட்குங்கால் "ஈ" எனக்கூறல் மரபு. ஆக ஈன்ற என்பதால், தாய் உயர்ந்து, உலகெலாம் தாழ்ந்த நிலை உண்டாகி தாய்க்குப் பெருமை சேர்ப்பதாயிற்று. "தம்மின் தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க் கெல்லாம் இனிது" என்கிறார் வள்ளுவர் (68). ஆக, அவள் ஈன்ற மக்கள் அறிவால் மாபெரும் பயன் அடைந்த இம்மா நிலத்து மக்கள் எல்லாம் தாழ, அவள் உயர்ந்து

விட்டாள். "ஈன்ற" என்ற சொல்லை ஆண்ட வள்ளுவர் துணையால்.

பொழுது:

"அமிழ்தினும் ஆற்ற இனிதே, தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ்", "மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம்; மற்றவர் சொற் கேட்டல் இன்பம் செவிக்கு" "குழல் இனிது, யாழ் இனிது என்ப தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்" (குறள்: 64, 65, 66) இக்குறட்பாக்கள் - வழி மக்கள், தம்மைப் பெற்றவர்களுக்கு எப்பொழுதெல்லாம் இன்பம் ஊட்டுவர் என்பதை விளக்கியுள்ளார் திரு வள்ளுவர்.

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்கள்"

என்ற புறப்பாட்டின் (188) மூலம் அம்மக்கள் மகிழ்ச்சிதரும் நிலைகளை விளக்கியுள்ளார், பாண்டியன் அறிவுடைநம்பி என்ற பாவலகாவலன்.

"பெற்ற அன்றினும், பிஞ்ஞகன் பிடித்த அப்பெரு வில் இற்ற அன்றினும் எறிமழுவாளவன் இழுக்கம் உள்ள அன்றினும் பெரியதோர் உவகையன் ஆனான்" (கம்ப. அயாத்தி: மந்திரம்: 42) என்பதன் மூலம் மக்கள் எந்நிலையிலெல்லாம் பெற்றவர்களுக்கு மகிழ்ச்சி தருவர் என்பதை விளக்கியுள்ளார் கம்பர்.

இவ்வாறு மகன் பிறந்து பெரியவனாகும் வரையிலான அவன் வாழ்க்கையில் நிகழும் ஒவ்வொரு சிறப்புக் கண்டும் மகிழ்பவள் தாய். அவ்வாறாகவும் ஈன்ற பொழுதைய இன்பத்தை மட்டும் தனித்து பிரித்துக் கூறியிருப்பானேன்? மகனைப் பெறும் வரை, அவள்

பெற்றோர்க்கு மகள். அவள் கணவனுக்கு மனைவி; வாழ்க்கைத் துணை. ஆனால் மகனைப் பெற்றதும் இவை யெல்லாவற்றிலும் சிறந்த தாயாம் நிலையினை அவள் அடைகிறாள். தம்மின் தம் மக்கள் அறிவு டைமை மாநிலத்து மண்ணுயிர்க்கெல்லாம் இனிது என்ற வகையில் உலகம் போற்றும் ஒருவனை உலகிற்கு அளித்த பெருமைக்கு உரியவளாகி விடுகிறாள். 'மலடி யலடி என்று மாநிலத்தார் ஏசாமல், தாய் என்னும் பெருமைதனைத் தரணியில் பெற்றவளாகிறாள்.' ஆகவே ஈன்ற பொழுதைய இன்பத்தைச் சிறப்பித்துக் கூறி யுள்ளார் குறளாசிரியர்.

இன்:

இன் எனும் இடைநிலைச் சொல் காட்டிலும் எனும் பொருளுடையது. அதை விடுத்து, "ஈன்ற பொழுது - பெரிது உவக்கும்" எனக்கூறியிருந்தால், மேலே கூறிய மகனின் வாழ்க்கை நிலையில் காணலாகும் உயர்வு கண் டெல்லாம் மகிழ மாட்டாள், ஈன்ற பொழுது மட்டுமே மகிழ்வாள் எனப் பொருள் தந்து தாய்க்கு பெரியதொரு இழுக்கத்தை தந்துவிடும். அதை தவிர்க்க "இன்" இன்றி யமையாது இடவேண்டியதாயிற்று.

பெரிது:

பெரிது என்ற இச்சொல்லை விடுத்து "ஈன்ற பொழு தின் உவக்கும்" என்று கூறியிருந்தால், மகன் வாழ்க் கையில் காணலாகும் பல்வேறு வளர்ச்சி நிலையிலும் தாய் அடையும் இன்பம் அனைத்தும் ஒரு நிலையின வாம் எனப் பொருள் தந்து, ஈன்ற பொழுதைய இன்ப அளவைக் குறைத்துவிடும். அக்குறைபாட்டினைத் தவிர்த்து; அப்பொழுதெல்லாம் மகிழ்வாள். ஆனால், ஈன்ற பொழுதில் பெரிதும் உவப்பாள் என ஈன்ற பொழு தைய இன்பப் பெருக்கை தனியே பிரித்துக் காட்ட, "பெரிது" என்பது வேண்டப்பட்டதாயிற்று.

உவக்கும்!

மகிழும், களிக்கும் என்பன போலும் சொற்களில் யாதேனும் ஒன்றினை ஆண்டிருந்தாலும் குற்றம் இல்லை. ஆனால் உவக்கும் என்ற சொல்லைத் தேடித் தெரிந்து ஆண்டுள்ளார்.

உவகையாவது: அளவிறந்த மகிழ்ச்சி, அளவிறந்த களிப்பு, அளவிறந்த இன்பம்; நெஞ்சு நிறைந்து வழியும் மகிழ்ச்சி; களிப்பு "மெய்ம்மலி" உவகை (நற்: 43, குறுந்: 398, புறம்: 45). அகம்மலி உவகை (மலைபடுகடாம். 84) "நெஞ்சமலி உவகை" (பதிற்று: 40, 26) என்ற ஆன்றோர் வாக்குகளை அறிக! ஈன்று புறம் தந்த தன்கடன்; சான்றோன் ஆக்கிய தந்தை கடன் ஆகியவற்றிற்கு ஈடாக மகன்பால் தான் எதிர்பார்த்த பெருமையைக் காட்டிலும் மிகப் பெரும் பெருமையைக் கண்டதனால், தாய் அடைந்த அளவிருந்த மகிழ்ச்சியை உணர்த்த வேண்டியிருத்தலின், உவகை என்ற சொல்லை அங்கு இடவேண்டியதாயிற்று. "சிறுவன் களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை, ஈன்ற ஞான்றினும் பெரிதே (புறம்: 277) சிதைந்து வேறாகிய படுமகன் கிடக்கை காணூஉ, ஈன்ற ஞான்றினும் பெரிதும் உவந்தனளே" (புறம்: 278) என ஆண்டெல்லாம் கூட "உவகை" என்ற சொல்லையே ஆண்டிருத்தல் காண்க.

தன்:

மகன்களெல்லாம் ஒரே பண்புடையராகி விடுவதில்லை. நாட்டவர் போற்றும் நல்லவனாகப் புகழ் பெறுவான் ஒருவன். ஊரெல்லாம் பழிக்க நன்று உள்ளக் கால் விற்றற்குரிய கயவனாகிக் கழிவன் ஒருவன்; பிறர் முன்னவனைக் காட்டி, "இவன் யார்" என்றவழித் "தன் மகன்" எனப் பெருமிதம் தோன்ற பதில் அளிப்பாள் தாய்; பின்னவனைக் காட்டி கேட்ட வழி "அவன்

யாவனோ? யான் அறியேன்" என்பாள் தாய். நல்ல மகனை நாடு போற்றும்; அல்லாதவனை அவனி தூற்றும்.

''இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்று எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மல் (அகம்: 66)

என நல்ல மகனைப் பெற்றவளைப் பாராட்டியதன் மூலம் அந்நல்ல மகனைப் பாராட்டியுள்ளார் புலவர் செல்லூர்க்கோசி கண்ணனார்.

தகாக் காதல் கொண்டு, தவறு செய்து கொலையுண்டு போனான் மகன் எனக் கேட்ட சோழ மன்னன் ஒருவன்.

''மகனை முறை செய்த மன்னவன் வழி ஓர்
துயர் வினையாளன் தோன்றினன் என்பது
வேந்தர் தம் செவி உறுவதன் முன்னர்
ஈங்கு இவன் தன்னையும் ஈமத்து ஏற்றுக
—மணிமேகலை: 22-210-213.

என ஆணையிட்டான் எனவும், அம்மகன் கொலையுண்டது. கேட்ட அவன் தாய் அரசமாதேவி ஆற்றாது அழுவது கண்ட ஒரு முதாட்டி,

''தன் மகன் காத்தன்று. பிறர் மகன் கொண்டன்று,
என் எனப்படுமோ நின் மகன் மடிந்தது?"
–மணிமேகலை (23: 17–18)

எனக் கேட்டுத் துயர் ஆற்றினாள் எனவும் கூறி, நல்லவன் அல்லாத மகனைப் பழித்துள்ளார் சீத்தலைச் சாத்தனார்.

பழியொடு படராமை மட்டுமன்று; புகழொடு பொலிந்தவன் மகன் ஆதல் கண்டு தன் மகன் எனப்

பெருமை கொள்வாள் தாய் என்பதை உணர்த்த "தன்" என்பது இன்றியமையாது இடப்பட வேண்டியதாயிற்று.

மேலும், பெற்ற தாயைப் பேணி வளர்க்கும் மகனும் உலகில் உள்ளான். பெற்ற தாய் மடிப்பிச்சை எடுக்க பிறிதோரிடத்தில் பெருக வாழும் மகனும் உள்ளான். இந்த மகன், பின்னவன் போன்றவன் அல்லன், மாறாக முன்னவன் போன்றவன் என்பதை உணர்த்தவும் "தன்" என்பது தேவைப்பட்டது.

மகன்:

மேலே கூறிய அனைத்துப் பண்புகளும்-மகளுக்கும் பொருந்தாவோ? ஏன் மகளைக் கூறாது மகனைக் கூறினார்? மகனுக்கு நிகராக வளர்க்கப்பட்டாலும் பருவம் வந்துற்றதும் தக்கான் ஒருவனைத் தேடி அவ னுக்கு மணம் செய்து கொடுத்து அவனோடு அவன் மனைக்கு அனுப்பி வைக்கப்பட வேண்டியவள் மகள். பெற்றோர் அனுப்பி வைக்கவில்லை என்றால், தக்கான் ஒருவனைத் தானே தேர்ந்து கொண்டு அவன் மனை சென்று வாழவேண்டியவள். மகள் பிறந்த மணணில் நெடிது நாள் இருக்கத்தக்கவள் அல்லள். புகுந்த வீட்டில் அவள் நடத்தும் வாழ்க்கை முறையால் பிறந்த வீட்டிற்கும், புகுந்த வீட்டிற்கும் பெருமை சேர்க்க வேண்டியவள்.

பல்லாற்றாலும் மனந்தரும் சந்தன மரம். அதை அரைத்துச் சந்தனக் குழம்பாக்கித் தம் மெய்யில் பூசிப் பயன் படுத்திக் கொள்வார்க்கல்லாது, அது மலையி டத்தே முளையிட்டு வளர்ந்தாலும் அது அம்மலைக்கு எவ்விதப் பயனையும் தராது.

தலையாய சிறப்பு வாய்ந்த வெண்முத்துக்கள்; அவற்றை அணியாக்கி அணிந்து கொள்வார்க்குப் பயன்

படுவதல்லது, அவை கடலிடையே பிறப்பினும், அக் கடலுக்கு எவ்விதப் பயனையும் தருவது இல்லை.

ஏழு நரம்புகளையும் கூட்டிய வழி எழும் இனிய இசை, பாடுவோர்க்கும், அவ்விசையினைக் கேட்பார்க்கும் பயன் படுவதல்லது அவ்விசை யாழினிடையே பிறக்கினும், அந்த யாழுக்கு யாதொரு பயனையும் அளிப்பதில்லை.

சந்தனமும், முத்தும், இசையும் போன்றவள்தான் மகள்; புகுந்த வீட்டாருக்கு பயன்படுவதல்லது பிறந்த வீட்டாருக்குப் பயன்படப் பண்ணுவது முறையாகாது என்கிறார், பாலை பாடிய பெருங்கடுங்கோ.

ஆகவே தான் மகளைக் கூறாது மகனைக் கூறினார் வள்ளுவர்.

சான்றோன் :

முடியாட்சிக் காலமாயின் வேந்தருள் வேந்தன்; குடியாட்சி காலமாயின் குடியரசுத்தலைவர்; பெரு நாட்டின்பிரதம அமைச்சர்; மாநிலமாயின் முதலமைச்சர்; பல்கலைக்கழகத் துணைவேந்தர்; தலைமை பேராசிரியர், சிறந்த மருத்துவர், சிறந்த பொருளாளர், சிறந்த வணிகர், சிறந்த தொழிலதிபர், பெருநிலக்கிழார், சிறந்த நடிகர், சிறந்த ஆட்டக்காரர் எனப் பலநிலைப் பெரியார்கள் எல்லாம் இருக்கவும், அவர்களை விடுத்துத் தன்மகனைச் சான்றோனாம் நிலையில் வைத்தமைக்கு யாது காரணம்?

ஒரு நாட்டிற்கு இவர்கள் எல்லாம் தேவை என்றாலும் இவர்களைப் பெற்று விட்டதால் மட்டுமே ஒரு நாடு நாடாகிவிடாது. எவ்வழி நல்லவர் ஆடவர் ; அவ்வழி நல்லை ; வாழிய நிலனே" (புறம் : 187) என்றார்

ஔவையார் ஒரு நாட்டிற்குப் படை வேண்டும். பசியாற உண்ண உணவு வேண்டும். பல்வேறு அணிகலன் அளிக்கும் பொருள் வளம் வேண்டும். ஆனால் இவை மட்டும் போதா, அந்நாட்டில் சான்றோர்களும் இருத்தல் வேண்டுவது இன்றியமையாதது.

அரசர் முதல், ஆட்டக்காரன் வரையான பல்நிலை பெரியார்களாக அவர்கள் இருக்கலாம். ஆனால் அவர்களை எல்லாம் மக்கட்டன்மை யுடையவர் எனக் கொண்டு விடமுடியாது; "மக்களே போல்வர் கயவர்" (குறள். 1071) என்றார் வள்ளுவர். அதனால் உருவ ஒற்றுமையை மட்டும் கொண்டு ஒருவரை மக்கள் தன்மை வாய்ந்தவர் எனக்கொண்டு விடமுடியாது; மக்கட்டன் மையாலும் அவர்களும் நிரம்பியவராதல் வேண்டும் அப்போதுதான் அவர்கள் மக்களாகக் கருதப்படுவர். "உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று; வெறுத்தக்க பண்பு ஒத்தல் ஒப்பதாம் ஒப்பு" என்பது வள்ளுவர் வாக்கு.

இவ்வாறெல்லாம் பெருமைப்படுத்தப்படும் அச் சான்றோர்களின் பண்புதான் என்ன? சான்றாண்மைக் குரிய பண்புகள்தாம் யாவை? சுற்றத்தார் போலும் மக்கள் மட்டுமில்லாமல், உலகிலுள்ள எல்லா உயிர்களிடத்தும் அன்புகாட்டல், பழிபாவங்களுக்கு அஞ்சல், எல்லோர்க்கும், எந்நேரத்திலும் அவர் விரும்புவன கொடுத்து, உறுதுணையாய் நிற்றல், நண்பர், உறவினர் போல்வாரிடத்தில் சிறிதே கண்ணோட்டம் உடையராதல் எந்நிலையிலும், தீமையிலா வாய்மையே பேசுதல் இவையே சான்றாண்மை என்ற மாளிகையைத் தாங்கி நிற்கும் தூண்கள் என்கிறார் வள்ளுவர்.

"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம்
வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்" (குறள்: 983)

தன் மகன் சான்றோன் என்றதும், அவன்பால் இத்தனை பண்புகளுமே பொருந்தி, நிறைந்துவழிகின்றன என எண்ணி எந்தத் தாய்தான், மகிழ்ந்து இறும்பூது எய்தாதிருப்பாள்?

மகன் சான்றோன் என்றதும், அத்தாய்க்கு மன நிறைவு, மன மகிழ்ச்சி தருவது பிறிதொன்றும் உளது.

மகன் தானே சான்றோனாக ஆகிவிடல் இயலாது. அவனை ஒருவர் சான்றோனாக ஆக்கி இருக்க வேண்டும்; அந்த ஒருவர் யார்? அக்கடனை யார்பால் ஒப்படைத்திருக்கிறது இவ்வுலகம்? மகனை ஈன்று, அவன் உடலைப் பேணி வளர்த்துத் தன் கடமையைக் குறைவற முடித்த மனநிறைவில், பொன்முடியார் கூறுகிறார். "சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடன்" (புறம் 312) என்று மகனைச் சான்றோன் ஆக்க, தந்தை படாத பாடு படவேண்டும். பள்ளியில் விடுத்து படிப்பறிவு கொடுத்தல் முதல், பண்புகளைப் புகட்டும் வகையான பல்வேறு கடமைகளைத் தந்தை குறைவற நிறைவேற்றினால்தான், மகன் சான்றோன் ஆதல் இயலும். அதில் அவன் சிறிது தவறினாலும் "துள்ளித் திரிகிற காலத்து என் துடுக்கு அடக்கிப் பள்ளிக்கு வைத்திலனே என் தந்தையான பாதகனே" என அவன் மகனே அவனைப் பழிப்பான். ஆக, மகன் சான்றோன் என்றதும், 'ஈன்று புறந்தந்தது மட்டுமே நான் செய்தது! அவனைச் சான்றோன் ஆக்கியவர் என் கணவர், என மனநிறைவு எழ, கடமை ஆற்றிய கணவனை நினைவூட்டும் விதம் அச்சான்றோன் என்ற சொல்தான்!

என :

என்று சொல்ல, என்று புகழ, என்றெல்லாம் கொள்ளலாம்; இதற்கு வினைமுதல் இல்லை. சான்றோன் என்று சொன்னவர் யார்? விடை இல்லை. சொன்ன

காலம் எது? விடை இல்லை; ஆக, சான்றோன் எனச் சொன்னவர் உலகத்தார் அனைவரும்; எனச் சொன்னார் என்றும் கொள்ளலாம்; எனச் சொல்கிறார் என்றும் கொள்ளலாம். எனச் சொல்வார் என்றும் கொள்ளலாம். ஆக, வினைமுதலும், காலமும் குறியாச் சிறப்பால், உலகத்தார் அனைவரும் முக்காலத்தும் புகழ்வர் எனும் பொருள் தரும் சிறப்புடையதாகிவிட்டது "என" என்ற இச்சொல்.

கேட்ட :

"பெண் இயல்பால் தானாக அறியாமையின் கேட்ட தாய்" எனக் கூறினார் என்பது பரிமேலழகர் கூறும் காரணம். இது கற்கும் உரிமை மகளிர்க்கு மறுக்கப்பட்ட காலத்துக் கொள்கை விளக்கம். அது இப்போது எடுபடாது. தன் மகன் சான்றோன் என்பதைத் தாய் அறிவாள். ஆயினும், "என் மகன் சான்றோன்" எனக் கூறிப் பெருமைப்பட்டுக்கொள்ள எந்தத் தாயும் விரும்ப மாட்டாள். இது பண்புடைமையும் ஆகாது. தன் மகன் சான்றோன் என்பதைப் பிறர் எல்லாம் ஏன், தன் பகைவர்களும்கூட — கூறக்கேட்ட வழி மகிழ்வதே பண்புடைமையாகும், "மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசுவதிலோர் மகிமை இல்லை திறமான புலமை எனில், பிற நாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" என்றார் பாரதியார். பாரதியார் புகட்டிய அவ்வறிவுரையை ஏற்றவள் அத்தாய். ஆகவே தான், பிறர் புகழக் கேட்டு மகிழ்ந்தாள்.

"கேட்டதாய்" என்பதற்குப் பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒருமுறை அளித்தவிளக்கம் போற்றுதற்குரியது; அவர் விளக்கம் வருமாறு: ஒரு தாய்; ஆண்டு முதுமையின் எல்லைக்கே சென்று விட்டவள். நடமாட இயலாது. மகன் தன்னுடைய சான்றாண்மையைக் காட்டும் மேடைக்குச் செல்ல இயலாது. கண், பார்வை இழந்து

விட்டது. அக்காட்சியை காண முடியாது. காதும் சரியாகக் கேட்கவில்லை. ஆக வீட்டோடு, படுத்தப் படுக்கையாக வீழ்ந்து கிடக்கிறாள். இந்நிலையில் சிலர் வந்து அவள் மகனின் சான்றான்மையின் பெருமையை அவள்காது கேட்க உரத்த குரலில் கூறினார்கள்; அது கேட்ட அந்நிலையில் அவள் உடலில் புதுத்தெம்பு பிறந்து விட்டது. மகனைப் பெற்ற இளமைத் துடிப்பு உண்டாகி விட்டது. மகிழ்ச்சியின் எல்லைக்கே போய்விட்டாள் அத்தாய். இது அண்ணா அவர்கள் அளித்த விளக்கம்.

தாய் :

மகனைச் சான்றோன் எனப் பிறர் புகழக் கேட்ட தந்தைக்கு மகிழ்ச்சி வராதா ? தாய்க்கு மட்டும்தான் மகிழ்ச்சி வருமா? தந்தைக்கும் வரும், ஆனால் அவன் மகிழ்வதில், அத்தந்தைக்குப் பெருமை இல்லை. காரணம் மகனைச் சான்றோன் ஆக்கியதே அவன்தான். ஆக, தன் கடமை கண்டு தானே மகிழ்வது பண்பாகாது. ஆகவேதான் தந்தை மகிழவிடவில்லை வள்ளுவர் ; அம் மகிழ்ச்சியைத் தாய்க்கே உரிமையாக்கி உயர்ந்துவிட்டார் வள்ளுவர்.



# வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி

## ஆ. சூழ்நிலை

வள்ளுவர் சொல்லாடல் மாட்சி, இன்ன இடத்திற்கு இன்ன சொல்லைத்தான் போடவேண்டும் எனத் தேர்ந்து போடுவதோடு நின்றுவிடாது.

அவர் சொல்லாடல் நிலைக்கு மேலுமோரு பெருமையும் உண்டு. வடதுருவத்தையும், தென்துருவத்தையும் மோத விடுவதுபோல் சொற்பொருட்களை மோதவிடுவார். வடதுருவத்திற்குச் செல்வார். மறுகணமே தென் துருவத்திற்குத் திரும்பிவிடுவார். வேண்டத்தகாத ஒன்றை, வேண்டத்தக்கதாகக் கொள்ளும் வித்தகச் செல்லாடர் அவர்.

*1*) கொல்வதுபோலும் கொடுமை (''கொன்றன்ன இன்னா'' 109) என்றும், சாதலைக் காட்டிலும் கொடுமை வேறு இல்லை (''சாதலின் இன்னாதது இல்லை'' 260) என்றும், கொல்வதுபோன்ற வறுமை (''கொன்றதுபோலும் நிரப்பு'' 1048) என்றும், கொலையைக் காட்டிலும் கொடியவர், (''கொலையிற் கொடியர்'' 550) என்றும் கூறி, கொலை, அதன்பயனாம் சாவு ஆகியவற்றின் கொடுமைகளை வேறு இடங்களில் விளங்கக் கூறியிருக்கும் வள்ளுவர், ''சாவு ஆக்கம் தரும் (183); சாதல் இனிது (230); சாவு இரந்தாவது பெறத்தக்கது (780); வாழ்தலைக் காட்டிலும் சாதல் நன்று (967) என்றும் கூறியுள்ளார்.

எந்தச் சூழ்நிலை, அவரை அவ்வாறு கூறச்செய்தது? ஏன் அவர் அவ்வாறு கூறியுள்ளார் என்பதை ஆராய்ந்து பார்க்கின், அவர் செல்லாடல் மாட்சிக்கு விளக்கம் கிடைக்கும்.

வாழ்தலின் சாதல் ஆக்கம் தரும்; யாருக்கு? இதோ விடை: ஒருவரைக் காணாதபோது, அவரைப்பற்றி எவ்வளவு இழிவான கருத்துக்களைக் கூறலாமோ, அவ்வளவும் கூறிவிட்டு, அவரை நேரில் கண்டபோது, எவ்வளவு அதிகமாகப் புகழலாமோ அவ்வளவு புகழ் உரைகளை வழங்கி, அதுகேட்கும் அவ்வப்பாவி, அப்புகழ் உரைகள், அவன் உளமார உரைத்த உரைகள் என நம்பி மகிழ்ந்து, அம்மகிழ்ச்சி மிகுதியால் வாரிவழங்கும் பொருள் வளத்தால் வாழ்பவன் ஒருவன் அவ்வாறு, காணா வழிப பழிக்கவும், கணடவழிப் புகழவும் அறியாமையால், வாழ்தற்கேற்ற வளம்காணாது இறந்துபோகிறான் மற்றொருவன். இவ்விருவரையும் உலகம்,முன்னவனைப் பழிக்க, பின்னவனைப் புகழும். அப்புகழ் உரைகள், உலகுள்ள அளவும் நின்று நிலைபெறும். அதுவே அவனது ஆக்கம். இந்தச் சூழ்நிலையில்தான் அவ்வாறு கூறியுள்ளார்.

''புறங் கூறிப் பொய்த்து உயிர் வாழ்தலின், சாதல்,
அறம் கூறும் ஆக்கம் தரும்'' (183)

புறங்கூறி வாழ்தலின் இழிவை விளக்க, வள்ளுவர் சாவுக்கு வரவேற்பு கொடுக்க வேண்டியதாயிற்று.

2) வறுமையால்வாடி, தன்பால் வந்து பொருள் வேண்டி நிற்பார்க்கு, அவர்க்குத் தேவைப்படுவன வழங்கலும், அவ்வாறு வழங்குவதால் புகழினைப் பெறுதலுமே வாழ்வாம். அவையே உயிர்க்குச் செல்வமாம்; இவை இல்லையேல் உயிர்க்கு வாழ்வு இல்லை.

''ஈதல், இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு'' (231)

உயிரின் வாழ்வு, ஈதலாம் புகழில் நிற்பதாக, தன்பால் வந்து இரப்பார்க்குக் கொடுத்து உதவ இல்லாமையே ஒருவன் நிலையாயின், அந்நிலையில் வாழ்ந்து, அதையே எண்ணி

எண்ணித் துயர் உறுவதைக்காட்டிலும், இறந்துபோவதால் அத்துயர் இல்லாமை மட்டும் அன்று; இனிமையும் பயக்கும். ஆக, ஈயமாட்டா இழிநிலையை விளக்க வள்ளுவர் சாவுக்கு வரவேற்பு கொடுக்க நேர்ந்தது;

''சாதலின் இன்னாதது இல்லை; இனிது அதூஉம்
ஈதல் இயை யாக்கடை'' (230)

3) மகனைப் பெற்றுப் பெரியவனாக்கி விடல் தாய்க்குக் கடன்; சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடன்; நல்லவன் ஆக்குதல் நாடாள்வான் கடன்; களத்தில் தன் உயிர் விட்டாவது வெற்றிகண்டு கடனை நிறைவேற்றல் மகன் கடன்.

''ஈன்று புறந்தருதல் என் தலைக்கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக்கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''
(புறம் 312)

அக்கடனாற்றிக் களத்தில் உயிர்நீத்த ஒருவனுக்கு, அவன் தாய் உள்ளிட்ட பலரும் கண்ணீர் சொரிந்து; துன்பக் கண்ணீர் அன்று; இன்பக் கண்ணீர்; பாராட்டுவர். [சிறுவன் களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை ஈன்ற ஞான்றினும் பெரிதே (''புறம் 277). சிறுவன்.... சிதைந்து வேறு ஆகிய மகன் கிடக்கைகாணா ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே ''(புறம் 278)

கடன் ஆற்றி புகழ் சேறல்களை வெற்றி ஒன்றால் மட்டுமே கிட்டும் என்றநிலை இருந்த காலத்துக் கூற்று இது! உலகம்பெரிது; ஆற்றவேண்டிய கடன்களும் பலப்பல; எண்ணியாதன; அத்தகு கடன்களை ஆற்றுபவர் அனைவர்க்கும், அவனை ஆளாக்கியதாய் உள்ளிட்ட அனைவரும், அவன் புகழ் நிலைகேட்டு இன்பக் கண்ணீர் சொரிவர்; அதுவே அவன் வாழ்வின் பயன்; நிலையாஉலகத்து அவனின் புகழ் அல்லது நிலைத்து நிற்பது வேறு இல்லை.

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழ் அல்லால்
பொன்றாது நிற்பதொன்றில் (குறள் 233)

என்று கூறியவர் வள்ளுவர். ஆகவேதான், அத்தைகையசாவு அவனுக்குத்தானே வந்து வாய்க்காதாயின், அவன் அதை யாசித்தாவது பெறுதல் வேண்டும்; அது பெறுவதன் மூலம், வாழ்வில் நிலைபேறுடைய பேறுபெறுதல் வேண்டும் என்றார்.

"புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின், சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து" (780)

4) "வருவாயுள் கால் வழங்கி வாழ்தல்" இது வாழ்க்கைச் சட்டம்; முயன்று ஈட்டிய பொருள்களைத் தனக்கெனவே வைத்துக்கொள்ளாது, தக்கார்க்குக் கொடுக்கவும் வேண்டும். பெருஞ்செல்வன்: காவல் அற்று ஊர்நடுவே உள்ள உண்ணு நீர் நிறைந்த குளம் போலவும், உண்டற்கு இனிய பழங்கள் நிறைந்த மரம்போலவும் வாழவேண்டும், அதுவே வாழ்வின் பயன்: அவ்வாழ்வின் பயனைப் பெறுவதற்காக, அவ்வாறு உபகாரம் செய்வதால், கேடு வந்துறும் என்றால், அக்கேட்டினைத் தன்னைப் பிறர்க்கு விற்றாவது (அரிச்சந்திரன்போல) பெறுதல்வேண்டும் என்றார் வள்ளுவர். கேட்டினைப் பெறுதல் அறவுடைமையன்று;

அதிலும் தன்னை விற்றுக் கேட்டினைப் பெறுதல் அறவே அறிவுடைமையன்று என்பது உண்மை. இதை அறியாதவர் அல்லர் வள்ளுவர்; ஆயினும் மேலே விளங்கிய உலகியல் உணர்ந்தவர் அவர்; ஆகவேதான், கேடு பெற்றுக் கொள்ளத்தக்கது என்றார்.

''ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து'' (220)

5) கல்லாதவர், பொல்லாதவர்; ஆனால் நல்லவர் என்கிறார் வள்ளுவர்; அதில் தான் இருக்கிறது அவர் சொல்லாடலின் வல்லமை; எந்தச் சூழ்நிலையில் கல்லாதவரை நல்லவர் என்கிறார்? அவன் கல்லாதவன்; கற்றவர்கூடிய அவையுள் காலடி இடவும் தகுதியில்லாதவன்; அத்தகையான்; அவ்வவையுள்ளும் நுழைந்து; ஆங்குச் சொல்லக் கூடாத வற்றையெல்லாம் சொல்லி அவற்றையும் சொல்லவேண்டிய முறை அறியாமல், முறையில்லா முறையில்சொல்லி, அவர் இடையே ஒரு கேலிப்பொருளாக நிற்பதைக் காட்டிலும், ''அவைநடுவே நீட்டோலை வாசியா நின்றான் நன்மரம்'' என்பதுபோலும் பழிபெறுவதைக்காட்டிலும்,வாய்மூடி மௌனி யாக இருந்துவிடுவானாயின்; அவனே நல்லவன்; இந்தச்சூழ் நிலையில்தான் கல்லாதவனும் நல்லவன் என்றார்.

''கல்லா தவரும் நனிநல்லார் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்'' (403)

6) ''ஆக்கம் ஏமாப்பு உடைத்து'' (112), ''ஆக்கம் பெரிது'' (328), ''ஆக்கம் பலவும் தரும்'' (462, 522), 'ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்'' (584) என்றெல்லாம் பாடி ஆக்கத்தின் சிறப்பையும், ''நல்குரவு, தொல்வரவும், தோலும் கெடுக்கும்''(1043), ''நல்குரவு என்னும் இடும்பை'' (1045), ''நல்குரவு ஈன்ற தாயானும் பிறன்போல நோக்க

படும்'' (1047), என்றெல்லாம் பாடி, நல்குரவின் இழிவையும் எடுத்துக்காட்டியவர் வள்ளுவர். அந்த வள்ளுவர் கூறுகிறார், ''ஆக்கத்தைக் காட்டிலும் நல்குரவே தலையாயது என்று, அதிலேதான் இருக்கிறது, அவர் சொல்லாட்டலின் வித்தகம்.

ஆக்கத்தைவிட நல்குரவே தலை என்று கூறிவிட வில்லை; ஆக்கத்திற்குச் சில அடைமொழிகளையும், அதே போல், நல்குரவிற்குச் சில அடைமொழிகளையும் கொடுத்தே கூறியுள்ளார்; எந்த ஆக்கம்? பழியொடு வந்த ஆக்கம். சிறுபழியொடு அன்று; மிக்க பழியொடு வந்த ஆக்கம். நல்குரவு; யார்பால் உள்ள நல்குரவு? பழிக்கு அஞ்சும் சான்றோர்பால் உள்ள நல்குரவு; வெறும் வறுமை அன்று; மிக்க வறுமை. இப்போது புரியும் அவர் உட்கருத்து; நல்லவர் பழியொடுவரும் ஆக்கத்தை விரும்புதல் கூடாது. அப்பழிபடு செயல் செய்யாமையால் வறுமைதான் மிஞ்சும் என்றால்; அதுவே வரவேற்கத்தக்கது, என்று கூறுவதன் மூலம் பழியஞ்சல் பெருமையைக் கூறியுள்ளார் வள்ளுவர்.

> ''பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
> கழிநல் குரவே தலை'' (657)

7) பகையரசர்மீது படைதொடுத்துச் செல்லும் வேந்தன்பால், வறுமை இல்லையாயின், செல்லும் இடத்தில் அவன் படைவெல்லும் (''வறுமையும் இல்லாயின் வெல்லும் படை'' 408 ), சூதாட்டத்தைக் காட்டிலும் ஒருவனுக்கு வறுமையினைத்தரக் கூடியது வேறு ஒன்று இல்லை. (''சூதின் வறுமை தருவது ஒன்று இல்'' (934), அழியா வறுமை அறிவினை அழித்துவிடும் (''அறிவினை நீச்ச நிரப்பு கொன்றாங்கு'' 532 ), கொல்வதுபோலும் கொடுமை வாய்ந்தது வறுமை, (''கொன்றது போலும் நிரப்பு'' 1048)

என வறுமையின் கொடுமையையும், ஒரு பொருளாக மதிக்கத் தகாதவனையும் மதிக்கச் செய்யும் மாண்புடையது செல்வம், ("பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும்" 751 ), செல்வம் உடையவர்களை எல்லோரும் சிறப்பு செய்வர். ("செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு" 752), பொருள் அறம் தரும்; இன்பமும் தரும் ("அறன் ஈனும், இன்பமும் ஈனும், திறன் அறிந்து தீதின்றி வந்த பொருள்" 754). எனச் செல்வத்தின் சிறப்பையும் வாயாரப் புகழ்ந்தவர் வள்ளுவர்.

அந்த வள்ளுவர் கூறுகிறார், வறுமையைவிடக் கொடியது செல்வம் என்று. எந்த வறுமை? எந்த செல்வம்? வினாவை எழுப்புங்கள், விளக்கம் கிடைக்கும் அவர் கூற்றிற்கு. நல்லவர்கள்பால் வறுமை சேர்ந்து விட்டால், அது அவர்களை மட்டும் வருத்தும், வறுமை காரணமாக அந்த நல்லவர், பிறர்க்கு ஏதும் கேடுசெய்யார்; ஆகவே, அந்த வறுமையால் கேடு இல்லை; ஆனால் கல்லாதவன் ஒருவன்; நல்லது, தீது தெரியாதவன் ஒருவன்; அவன்பால் செல்வம் கொழித்து விட்டால், அச்செல்வத்தின் துணை கொண்டே செய்யக் கூடாதன எல்லாம் செய்வன். அவன் கொடுஞ் செயலுக்கெல்லாம் துணைபோகும் அச்செல்வம். இப்போது கூறுங்கள். நல்லார் கண் உள்ள வறுமை கொடியதா? கல்லாதான்பால் உள்ள செல்வம் கொடியதா? அச்செல்வந்தான் கொடிது உறுதியாக. ஆகவேதான் கூறினார் வள்ளுவர். வறுமையின் செல்வம் இன்னாது என்று! அதுதான் வள்ளுவர் சொல்லாடல் திறன்.

> "நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
> கல்லார்கண் பட்ட திரு" (408)

⁂ ⁂ ⁂

## வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி

## இ. கேள்விக்கணை.

திருவள்ளுவர் சொல்லாடல் மாட்சியின் பிறிதொருவகை, கேள்விக்கணைகளைத் தொகுத்தல். வருவாய? என்ற கேள்விக்கு, 'வருவேன்'' என்ற விடையைக் காட்டிலும், ''வாராது இருப்பேனா''? என்ற எதிர் கேள்வி கேட்பதன் மூலம், அளிக்கும் விடையில், பொருள் அழுத்தம் ஏற்படுகிறது. வினாவுக்கு விடையாக, எதிர்வினா தொடுக்கும் இம்முறையைத் தொல்காப்பியமும் ஏற்றுக் கொள்கிறது. ''வினாவும் செய்ய வினா எதிர் வரினே'' என்பது தொல்காப்பியம். (தொல்: சொல்:14)

வினாவுக்கு விடையாக, ஒரு வினாவைத் தொடுக்கும் இம்முறையினை வள்ளுவர் நாற்பது இடங்களில் நன்கு தேர்ந்து ஆண்டுள்ளார். அவற்றுள் ஒரு சில காண்போம்.

ஐயம்திரிபு அறக்கற்ற பெரியவர்களின் கால்களில் வீழ்ந்து வணங்குவது, கல்வி கற்றதன் பயன் ஆகும். உண்மை நிலை அதுவாகவும், கற்றிருந்தும், கற்றறிந்த பெரியவர்களின் காலில் வீழ்ந்து வணங்காராயின், அக்கல்வி கற்றதனால் பயன் இல்லை என்ற உண்மை நிலையை வற்புறுத்திக்கூற எண்ணிய வள்ளுவர், ''பெரியவர்களின் தாளை வணங்காராயின், அவ்வணங்காதார் கற்ற கல்வியால் யாது பயன்? என்ற கேள்வியைத் தொடுத்துள்ளார்.

''கற்றதனால் ஆய பயன்என்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்'' (குறள்:2)

ஒருவனுக்கு, அறச்செயல், புகழையும் தரும்; செல்வத்தையும் தரும். ஆதலில், அறத்தைக் காட்டிலும், அவனுக்கு ஆக்கம் அளிப்பது வேறுஎதுவும் இல்லை. இப்பொருளை வற்புறுத்திக் கூறவிரும்பிய வள்ளுவர், அறத்தைக் காட்டிலும் மேம்பட்ட ஆக்கம் வேறு இல்லை எனக் கூறுவதற்குப் பதிலாக, அறத்தைக் காட்டிலும் மேலான ஆக்கம் எது இருக்கிறது எனக்கேட்டு வைத்துள்ளார்.

''சிறப்பு ஈனும்; செல்வமும் ஈனும்; அறத்தின்ஊங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு? (குறள்:31)

வாழ்க்கை குறித்த அறநூல்கள் கூறியமுறைப்படி, ஒருவன், இல்வாழ்க்கையை நடத்தி வருவனாயின், அவன் இவ்வுலக இன்பம், மறுஉலக இன்பம் ஆகிய எல்லா இன்பங்களையும் பெற்றுவிடுவான். ஆகவே, அவன் இல்லறத்தை விடுத்துத் துறவறம் மேற்கொண்டு தவம் செய்து அடையக்கூடிய இன்பம் எதுவும் இல்லை. ஆகவே, அது தேவையும் இல்லை.

இல்வாழ்க்கை தத்துவத்தை வற்புறுத்தி வகுத்துத்தர எண்ணிய வள்ளுவர், துறவறத்தில் போய்ப்பெறக்கூடியது எதுவும் இல்லையென உடன்பாட்டு நிலையில் கூறாமல், போய்ப்பெறக்கூடியது என்ன இருக்கிறது? என வினா எழுப்பி விடுத்துள்ளார்.

''அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன்?'' (குறள்; 46).

மனைவி, மாண்புடையளாகி விட்டால், அத்தகையாளை மனைவியாகப் பெற்றவனிடத்தில், இல்லாத செல்வமே இல்லை. எல்லாச் செல்வமும் வந்து குவிந்து விடும். அதற்கு மாறாக, இல்லற மாண்பிலா ஒருத்தியை, ஒருவன் மனைவி

யாகப் பெற்றுவிடுவானாயின், அவனிடத்தில், அவள் வருவதற்கு முன்னர்க் குவிந்துகிடந்த செல்வக்குவியல் அனைத்தும் குறைந்துபோக, ஏதும் இல்லாதவன் ஆகி விடுவன். இல்லற வாழ்வின் இந்த உயிர்நிலையை உணர்த்த விரும்பிய வள்ளுவர், மனைவி நல்லவள் அல்லளாயின், ஏதும் இருக்காது; உள்ளதும் போய்விடும் என்றும் உடன்பாட்டு வாய்ப்பாட்டால் கூறாமல், இல்லாதது எது? என்றும், உள்ளது எது? என்றும் வினா எழுப்பியதன் மூலம், உணர்த்த விரும்பிய பொருளை அழுத்தமுற உணர்த்தியுள்ளார்.

''இல்லதுஎன், இல்லவள் மாண்புஆனாள்?
உள்ளதுஎன்,
இல்லவள் மாணாக் கடை? (குறள் 53)

மக்களாகப் பிறந்து ஒவ்வொருவரும் பிற உயிர்களிடம் அன்பாய் இருத்தல் பொருட்டே, உயிர் உடலோடு தொடர்பு கொண்டுள்ளது.

''அன்போடு இயைந்த வழக்குஎன்ப, ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு'' (குறள்-73) என்றும்,

அன்பின்வழி நின்ற உடலே உயிரோடு கூடிய உடலாகும். அன்பின் வழிச் செல்லாதவருடைய உடல் உயிரோடு கூடிய உடலன்று; அதுவெறும் தோல்போர்த்த எலும்புக்கூடாகும்,

''அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு'' (குறள் 80)என்றும்,
கூறி, அன்பின் பெருமையை, இன்றி அமையாமை விளக்கியும் வள்ளுவர்க்கு, மனநிறைவு உண்டாகவில்லை அன்பின் பெருமையை மேலும் வற்புறுத்திக் கூறி விரும்பினார்.

யாகப் பெற்றுவிடுவானாயின், அவனிடத்தில், அவள் வருவதற்கு முன்னர்க் குவிந்துகிடந்த செல்வக்குவியல் அனைத்தும் குறைந்துபோக, ஏதும் இல்லாதவன் ஆகி விடுவன். இல்லற வாழ்வின் இந்த உயிர்நிலையை உணர்த்த விரும்பிய வள்ளுவர், மனைவி நல்லவள் அல்லளாயின், ஏதும் இருக்காது; உள்ளதும் போய்விடும் என்றும் உடன்பாட்டு வாய்ப்பாட்டால் கூறாமல், இல்லாதது எது? என்றும், உள்ளது எது? என்றும் வினா எழுப்பியதன் மூலம், உணர்த்த விரும்பிய பொருளை அழுத்தமுற உணர்த்தியுள்ளார்.

> "இல்லதுஎன், இல்லவள் மாண்புஆனாள்?
> உள்ளதுஎன்,
> இல்லவள் மாணாக் கடை? (குறள் 53)

மக்களாகப் பிறந்து ஒவ்வொருவரும் பிற உயிர்களிடம் அன்பாய் இருத்தல் பொருட்டே, உயிர் உடலோடு தொடர்பு கொண்டுள்ளது.

> "அன்போடு இயைந்த வழக்குஎன்ப, ஆருயிர்க்கு
> என்போடு இயைந்த தொடர்பு" (குறள்-73) என்றும்,

அன்பின்வழி நின்ற உடலே உயிரோடு கூடிய உடலாகும். அன்பின் வழிச் செல்லாதவருடைய உடல் உயிரோடு கூடிய உடலன்று; அதுவெறும் தோல்போர்த்த எலும்புக்கூடாகும்.

> "அன்பின் வழியது உயிர்நிலை; அஃது இலார்க்கு
> என்புதோல் போர்த்த உடம்பு" (குறள் 80)என்றும்,

கூறி, அன்பின் பெருமையை, இன்றி அமையாமை விளக்கியும் வள்ளுவர்க்கு, மனநிறைவு உண்டாகவில்லை அன்பின் பெருமையை மேலும் வற்புறுத்திக் கூறி விரும்பினார்.

விரும்பிய வள்ளுவர், ''ஒருவனுடைய மனத்தின்கண் இருக்க வேண்டிய சிறந்த உறுப்பு அன்பு! கை, கால், கண். காது, வாய் ஆகிய புறத்து உறுப்புக்கள் எல்லாம் அன்பின் துணைகொண்டே செயல்படுவன; ஆகவே, அகத்துறுப்பு ஆகிய அன்பு ஒருவனிடத்தில் இல்லாதுபோயின் அப்புறத்து உறுப்புக்களால் பயன் இல்லை'' என்ற கருத்தையும் கூறவிரும்பினார்: அதைக் கூறவிரும்பிய அவர், அதை, அப்படியே கூறின், பொருள் சிறவாது என்பது உணர்ந்து, அகத்து உறுப்பாகிய அன்பு ஒருவனிடத்தில் இல்லாதபோது, அவனுடைய புறத்து உறுப்புக்கள் எல்லாம் செவ்வனே அமைந்திருந்தும் யாது பயன்? அவற்றால் அவனுக்கு யாதுபயன்? என்ற வினாவை எழுப்பியதன் மூலம், கூறவேண்டியதை வலுவாகக்கூறி வைத்தார்.

''புறத்துஉறுப்பு எல்லாம் எவன்செய்யும்? யாக்கை
அகத்துறுப்பு அன்பு இலவர்க்கு'' (குறள்: 79)

குற்றமே சிறிதும் இல்லாமல், முழுக்க முழுக்க குணங்களாலேயே நிறைந்தவனையோ, அதேபோல், குணமே சிறிதும் இல்லாமல், முழுக்க முழுக்க குற்றங்களாலேயே நிறைந்தவனையோ உலகில் காண்பது அரிது; குணமும், குற்றமும் உடையவனே மனிதன்: அதனால்தான், ஒருவன் குணாவானா அல்லது குற்றவாளியா எனத் தீர்ப்பளிப்பதன் முன்னர், அவன்பால் உள்ள, குணங்களின் அளவு, குற்றங்களின் அளவுகளை எடைபோட்டுப் பார்த்துக் குணங்கள் அதிகமாயின் குணவான் என்றும், குற்றங்கள் அதிகமாயின் குற்றவாளி எனத் தீர்ப்பளியுங்கள் என வள்ளுவர் சட்டம் வகுத்துத் தந்துள்ளார்.

''குணம் நாடிக், குற்றமும் நாடி, அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்'' (குறள்-504) என்பது அது,

விரும்பிய வள்ளுவர், ''ஒருவனுடைய மனத்தின்கண் இருக்க வேண்டிய சிறந்த உறுப்பு அன்பு! கை, கால், கண். காது, வாய் ஆகிய புறத்து உறுப்புக்கள் எல்லாம் அன்பின் துணைகொண்டே செயல்படுவன; ஆகவே, அகத்துறுப்பு ஆகிய அன்பு ஒருவனிடத்தில் இல்லாதுபோயின் அப்புறத்து உறுப்புக்களால் பயன் இல்லை'' என்ற கருத்தையும் கூறவிரும்பினார்: அதைக் கூறவிரும்பிய அவர், அதை, அப்படியே கூறின், பொருள் சிறவாது என்பது உணர்ந்து, அகத்து உறுப்பாகிய அன்பு ஒருவனிடத்தில் இல்லாதபோது, அவனுடைய புறத்து உறுப்புக்கள் எல்லாம் செவ்வனே அமைந்திருந்தும் யாது பயன்? அவற்றால் அவனுக்கு யாதுபயன்? என்ற வினாவை எழுப்பியதன் மூலம், கூறவேண்டியதை வலுவாகக்கூறி வைத்தார்.

''புறத்துஉறுப்பு எல்லாம் எவன்செய்யும்? யாக்கை
அகத்துறுப்பு அன்பு இலவர்க்கு'' (குறள்: 79)

குற்றமே சிறிதும் இல்லாமல், முழுக்க முழுக்க குணங்களாலேயே நிறைந்தவனையோ, அதேபோல், குணமே சிறிதும் இல்லாமல், முழுக்க முழுக்க குற்றங்களாலேயே நிறைந்தவனையோ உலகில் காண்பது அரிது; குணமும், குற்றமும் உடையவனே மனிதன்: அதனால்தான், ஒருவன் குணாவானா அல்லது குற்றவாளியா எனத் தீர்ப்பளிப்பதன் முன்னர், அவன்பால் உள்ள, குணங்களின் அளவு, குற்றங்களின் அளவுகளை எடைபோட்டுப் பார்த்துக் குணங்கள் அதிகமாயின் குணவான் என்றும், குற்றங்கள் அதிகமாயின் குற்றவாளி எனத் தீர்ப்பளியுங்கள் என வள்ளுவர் சட்டம் வகுத்துத் தந்துள்ளார்.

''குணம் நாடிக், குற்றமும் நாடி, அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்'' (குறள்-504) என்பது அது,

மக்கள் எல்லோருமே, குணமும் குற்றமும் உடையர் ஆகவே, பிறர்பால் உள்ள குற்றங்களைக் கண்டு அவற்றைப் பிறர் எல்லார் முன்னும் எடுத்து உரைத்து பழிக்கும் குணம் உடையான் ஒருவன். அவ்வாறு பழிப்பதற்கு முன்னர்ச், சிறிதே, சிந்தித்துத் தன்பால் உள்ள குற்றங்களையும் ஆராய்ந்து பார்க்கின், அவன் பிறர் குற்றம்கண்டு பழிப்பது செய்யான் ஆகவே, பிறரைப் பழிக்க, அதுகேட்ட அவர், அவன்பால் சினம்கொண்டு தாக்கல் போலும் கேடுகள் சிலவாகும்,

இந்த அரிய அறவுரையை உணர்த்த விரும்பிய வள்ளுவர், அவ்வாறு நடந்து கொண்டால் தீது இராது என உடன்பாட்டு நிலையில் கூறினால் பெருள் சிறக்காது என உணர்ந்து, அவ்வாறு நடந்து கொண்டால், யார்க்கேனும் ஏதேனும் கேடு உண்டாகுமா? என வினா விடுத்துள்ளார்.

> "ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
> தீதுஉண்டோ மன்னும் உயிர்க்கு? "(குறள்: 190)

அறிவுடைமையின் பெருமையை விளக்க ஒரு தனி அதிகாரமே ஒதுக்கி, இறுதியாக, "அறிவுடையார் எல்லாம் உடையார்,, எனக் கூறிய திருவள்ளுவரே, "அவ்வறிவினால் ஏதேனும் பயன் உண்டோ?" என்ற கேள்வியைக் கேட்டு வைத்துள்ளார். தனக்கென வாழாது, பிறர்க்கென வாழ்தலே வாழ்க்கை. அவ்வாறு வாழ்வாரே பெரியார்.

> "தமக்னெமுயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர்
> உண்மையால்தான், உலகம் உண்டு"

என்றார், கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதியார் (புறம்:182)

"தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளன்" என்பது அகநானூறு. (54); ,'பிறர்க்கு அறம்முயலும் பெரியோன்;"

"தன்னுயிர்க்கு இரங்கான்' பிற உயிர் ஓம்பும் மன்னுயிர் முதல்வன்" என்பன மணிமேகலை (11:48;25:161-7)

ஆக, அறிவு, தனக்கெனவாழும் வாழ்க்கைக்குத் துணை போகாது; பிறர்க்கென வாழும் வாழ்க்கைக்குத் துணை போதல் வேண்டும்; பிறர்க்குவரும் இன்ப துன்பங்களைத் தனக்கு வந்தனவாகக்கொள்ள அறிவு துணைசெய்ய வேண்டும்; அவ்வாறு கொள்ளத் துணைபோகாத அறிவால் பயன் இல்லை. அறிவின் இவ்விலக்கணத்தை விளக்கவந்த இடத்தில்தான், வள்ளுவர்' அத்தகு அறிவால் ஆவது ஏதும் இல்லை எனக்கிடந்தாங்கு உரைத்தால், பொருள் அழுத்தம் இராது என்பதால், அத்தகு அறிவால் ஆகக்கூடிய பயன் ஏதேனும் உளதா? என வினா எழுப்பிச் சென்றுள்ளார்.

"அறிவினான் ஆகுவது உண்டோ: பிறிதின்நோய்
தன்நோய் போல் போற்றாக்கடை" (குறள் : 315)

—O—

# வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி

## ஈ. உவமை

திருவள்ளுவர் சொல்லாட்சியின் மாட்சியில் பிறதொரு வகை, ஓர் அறவுரையினையே, மற்றோர் அறவுரைக்கு உவமை ஆக்குதல். அதாவது எல்லார்க்கும் தெரிந்த அறத்தைத் தெரியாத அறத்திற்கு உவகை ஆக்குதல். சில காண்போம்.

பிறர்பால் உள்ள, பெருங்கல்வி, பெருஞ்செல்வம், பெரும் புகழ் காண்பான் ஒருவன். அவற்றைத் தானும் அடையவேண்டும் என முயற்சிக்கலாமே ஒழிய, பொறாமை கொள்ளுதல் கூடாது. மாறாகப் பொறாமை கொண்டு விட்டால், அது அவன் பால் வெறுப்பையும், பகையையும் உண்டாக்க, இறுதியில் அவன் அழிவிற்கு வழிகோலிவிடும்; அவன்பால் இருந்த செல்வமும் இல்லாமல் போய்விடும். அவனைத் தீயவழிகளில் செல்லவும் துணைபோய்விடும்.

"அழுக்காறு என ஒருபாவி, திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்" என்பது குறள் (168). இது எல்லார்க்கும் தெரிந்தஒன்று; கண்ணுக்குப் புலப்படக்கூடியது,

அதேபோல், நல்லொழுக்கம். இதுஉடையானுக்கு உயர்வினைத்தரும். அத்தகு ஒழுக்கம் ஒருவன்பால் இல்லாது போயின், அவன் இழிந்தவன் ஆவன்; பழி அவனை வந்து சேர்ந்து விடும். தீய செயல்களில் அவனைக் கொண்டுபோய் விட்டுவிடும். அவன் வாழ்க்கையில் அந்நிலையில் தாழ்வு உண்டாகுமே அல்லது உயர்வு உண்டாகாது. இந்த உண்மையை உலகத்தவர்க்கு உணர்த்த விரும்பிய

வள்ளுவர்க்குக் கிடைத்த உவமை, பொறாமை உடையான்பால் உள்ள வறுமை; செல்வம் இல்லாமை, ஒழுக்கம் இல்லாதான்பால் உயர்வு இன்மைக்கு உவமை ஆக்கி விட்டார்.

"அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று இல்லை.
ஒழுக்கம் இலான்கண் உயர்வு" (குறள்: 135)

பொருள் தேடலாம் வழிகளை மேன்மேலும் உருவாக்க வேண்டும்: அவ்வாறுகண்ட வழிகளில் சென்று பொருளைச் சேர்க்க வேண்டும்; சேர்த்த பொருளைப் பிறர் கவர்ந்து செல்லாவாறு காத்தல் வேண்டும்: அவ்வகையால் குவியும் செல்வத்தை, இன்னதற்கு இவ்வளவு; இன்னார்க்கு இவ்வளவு எனப்பகிர்ந்து அளிக்க வேண்டும். இவ்வகையில் செயல்படுவார் இடத்திலேயே செல்வம் அழியாது நிற்கும்.

இவ்வழிகளைப் பின்பற்றாதார்பால், பண்டே செல்வம் குவிந்துகிடப்பினும், அது நாளடைவில், சிறுகச்சிறுகக் குறைந்து கொண்டே வந்து இறுதியில் இல்லாமல் போய்விடும்.

இது எல்லார்க்கும் தெரிந்த ஒன்று: ஆனால் தன் உறவினர் அல்லாதார் இடத்தும், மக்கள் உயிர் அல்லாத ஏனைய உயிர்களிடத்தும் அன்பு காட்டுவதாம் அருள் என்பது கண்ணுக்குப் புலப்படாத ஒன்று. பொருள், நல்லவர் இடத்து மட்டுமே அல்லாது, நல்லவர் அல்லாதவர் இடத்தும் குவிந்து கிடக்கும்; ஆனால் அருள் நல்லவர் இடத்து மட்டுமே இடம் பெற்றிருக்கும். பொருள் இன்றி வறுமையில்வாடும் ஒருவன், பிறிதொருகாலத்தில் கொழுத்த செல்வம் உடையவன் ஆகவும் கூடும். ஆனால், முன்பு அன்புடையவராக இருந்த ஒருவர், யாதோ ஒரு காரணத்தால் அந்த அருளை மறத்துவிடுவாராயின் அந்த அருளை மீண்டும்

பெறுதல் அவரால் இயலாது. அருள் உடையவர்க்குத் துன்பம் என்பது எக்காலத்தும் உண்டாகாது.

இவ்வாறெல்லாம் உயர்வுடைய அருளை உடையவர். இம்மையில் பெருமைப்பட வாழ்தலோடு, மறுமையிலும் நல்வாழ்வு பெறுவர். ஆனால், அருள் இல்லாதவர்க்கு இம்மையிலும் நல்வாழ்வு இல்லை; மறுமையிலும் நல்வாழ்வு கிட்டாது. இது உண்மை; ஆனால் பிறர்க்கு எளிதில் விளங்காத ஒன்று: இதை விளக்க வந்த வள்ளுவர்க்குப் பொருளைக்காக்கத் தெரியாத ஒருவன் கைகொடுத்து உதவ முன் வந்துள்ளான்; அதனால் கூறிவிட்டார்.

''அருள்இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை,
பொருள்இல்லார்க்கு
இவ்உலகம் இல்லாகி யாங்கு'' (குறள்:247)

இம்முறை இயலாது ஆயினும், ஒரு முறையாவது நாள் தோறும் நீராடி, உடலை நன்கு காத்துக்கொள்வது நீங்காக் கடமை ஆகும்; அக்கடமையினைக் குறைவற நிறைவேற்ற வேண்டின்; அதற்கு நீர் இன்றியமையாதது. நீர்வளம் அற்ற சகாரா போன்ற பாலைவன நாடுகளில் அது இயலாது; ஆகவே, புற உடலைத் தூய்மையாக வைத்துக்கொள்ள நீர் இன்றி அமையாதது, இது உலகத்தவர் அனைவரும் கண்ட, காணும் உண்மை.

எவர்க்கும் தீமை பயக்காத சொற்களைச் சொல்லுவது, உள்ளத் தூய்மை உடையாரால் மட்டுமே இயலக்கூடியது, ஒருவரின் மனம் தூய்மையானது என்பதை, அவரின் வாயிலிருந்து வெளிவரும் சொற்களிலிருந்தே உணர்ந்து கொள்ளலாம், இந்த உண்மையை உலகத்தவர் எளிதில் உணர்ந்து கொள்வது இயலாது. இயலாத அவர்க்கும் அதை

உணர்த்த விரும்பிய வள்ளுவர்க்குவந்து உதவியது தண்ணீர்? ஆகவே, அவரிடமிருந்து வெளிவந்து விட்டது.

> ''புறந்தூய்மை நீரான் அமையும்; அகந்தூய்மை
> வாய்மை யாற் காணப்படும்'' என்ற குறட்பா (298)

அழிவு அறியாப் பெருஞ்செல்வம் கல்வி. பதவி இல்லாமல் போய்விடும்; பொருள் அழிந்துவிடும்; ஆனால் ஒருவன் கற்ற கல்வி என்றும், எந்நிலையிலும் அழிவுறாது. கற்ற ஒருவன், எந்த ஊருக்குச் செல்லினும், எந்த நாட்டிற்குச் செல்லினும், அந்த ஊரும், அந்த நாடும், அவனை, அந்த ஊரான், அந்த நாட்டவன்போலவே மதிக்கும். அத்தகு கல்வியை ஒருவன் நிரம்பப்பெற வேண்டின், அவன் கற்றுக்கொண்டே இருக்க வேண்டும்; சாகும் வரையும் கற்க வேண்டும்'' என்கிறார் வள்ளுவர். ''என் ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு'' என்ற அவர் குறளினைக் (397) காண்க.

ஒருவன் எவ்வளவு கற்கின்றானோ, அந்த அளவே அவன் அறிவு பெருகும். சிறிதே கற்கின் சிறிது அறிவும், பெரிதே கற்கின் பேரறிவும் பெறலாம். கற்றுக்கொண்டே இருப்பின் அறிவும் பெருகிக் கொண்டே இருக்கும். இந்த உண்மையை விளக்க, வள்ளுவர்க்கு வழிகாட்டியானது மணற்கேணியின் ஊற்றுநீர்: மணற்பாங்கான நிலத்தில் உள்ள கிணற்றில், நீர், சிறிதே தோண்டின், சிறிய அளவிலான நீரையே தரும்; ஆழமாகத் தோண்டின், அதற்கேற்ப பெரிய அளவிலான நீரைத்தரும்.

மணற்கேணி, தோண்டத் தோண்ட, நீரைச்சுரந்து கொண்டே இருப்பதுபோல், அறிவும், கற்கக் கற்கப் பெருகிக்கொண்டே இருக்கும் எனக் கூறியுள்ளார்.

கிணற்றைத் தோண்டிக்கொண்டே இரு; நீர் பெருகிக் கொண்டே இருக்கும்; இது ஓர் அறிவுரை; எல்லார்க்கும் தெரிந்த அறிவுரை; கற்றுக்கொண்டே இரு; அறிவு பெருகிக் கொண்டே இருக்கும்; இது ஓர் அறிவுரை: ஆனால், எல்லோர்க்கும் தெரியாமல் ஒருசிலருக்கே தெரிந்த அறிவுரை: தெரிந்த அறிவுரையினைத் தெரியாத அறிவுரைக்கு உவமையாக்கிக் காட்டியுள்ளார் வள்ளுவர்.

> ''தொட்ட அனைத்து ஊறும் மணல் கேணி; மாந்தர்க்குக்
> கற்ற அனைத்து ஊறும் அறிவு'' (குறள்:396)

வாணிகம் செய்ய முதல் தேவை. முதல் இல்லாமல் வாணிகம் செய்ய இயலாது. முதலும் தொழிலுக் கேற்றவாறு அமைதல்வேண்டும். போதியமுதல் இன்றித் தொடங்கப்படும் தொழிலில் ஆக்கம் வராது, ஆக்கம் வராதது மட்டும் அன்று; உள்ள முதலும் அற்றுப் போகும், இது தொழில் தொடங்குவார், வாணிகம் செய்வார் அனைவரும் அறிந்திருக்க வேண்டிய, அறிந்திருக்கும் அறவுரை; அறிவுரை.

எல்லோரும் அறிந்திருக்கும், இவ்வறவுரையினை எளிதில் உணர்ந்து கொள்ளமாட்டா. ஆனால் இன்றியமையாது அறிந்து கொள்ளவேண்டிய ஓர் அறவுரைக்கு உவமையாக்கியுள்ளார் வள்ளுவர்.

ஒருவனுக்கு வாழ்க்கையில் துன்பம் நேரும்போது தூண்போல் நின்றுதாங்கி, அத்துயர் துடைக்கவல்ல பெரியார்களின்துணை அவனுக்கு இன்றியமையாது. அத்தகைய பெரியோர்களை, ஒருவன் துணையாகப் பெறத் தவறி விட்டானாயின், அவனுக்கு வாழ்வுஇல்லை; வாழ்வு இல்லை என்பது மட்டும் அன்று. அவன் இல்லாமல் அழிந்தே போவன். இந்த உண்மையை உணர்த்தவே, அந்த உண்மை உவமை.

> ''முதல் இலார்க்கு ஊதியம் இல்லை; மதலையாம்
> சார்பிலார்க்கு இல்லை நிலை'' (குறள் 449)

## 2. திருவள்ளுவரின் கடவுட் கொள்கை

### ஆரிய வழிபாட்டுக் கொள்கை:

திருவள்ளுவர் காலத்துக்கு பின்னரே, தமிழகம் அரிய வழிபாட்டுக் கொள்கையில் ஆழ்ந்துகிடந்தது தெய்வம்உண்டு (குறள்:43, 50, 55, 619, 702, 1023), தெய்வம் மக்களைக் காத்தல் ஒருபுறம் இருக்க' தெய்வத்தை மக்களும் காத்தல் வேண்டும் (தென்புலத்தார், தெய்வம்...என்ற ஆங்கு ஐம்புலத்தாறு ஓம்பல்தலை [43]); தெய்வம் வான்உலகத்தில் வாழும் (வான் உறையும் தெய்வம் [50]); தெய்வம் தொழத் தக்கது (தெய்வம்தொழாஅள் [55] ); தெய்வத்தால் எல்லாம் ஆகும்; அதனால் ஆகாதது எதுவும்இல்லை. (தெய்வத்தான் ஆகாது எனின் [619]); ஒருவர் உள்ளத்தில் உள்ளதை உள்ளவாறே உணரவல்லது தெய்வம்,

''ஐயப்படா அது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்(702) அந்த வன்மை

ஒருவனுக்கு இருக்குமேல் அவன் தெய்வமாகவே மதிக்கப் படுவான்); முயற்சி உடையானுக்குத் தெய்வமும் துணை நிற்கும்.

''குடி செய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத்தான்முந்துறும்'' (1023) என்றெல்லாம்

நம்பியிருந்தனர் தமிழர்.

### திருமால்

தன் ஈரடியால், மூவுலகையும் அளத்த திருமாலை ''அடியளந்தான் தாஅயது எல்லாம் (610); தாமரைமலர் திகர் கண்ணுடைய திருமாலை; அவன் வீற்றிருக்கும் உலகை

(தாமரைக் கண்ணான் உலகு [1103]); மடி உடுத்திக்காட்சி தரும் திருமாலின் திருக்கோலத்தை; அக்கோலத்தோடு அன்பர்க்கு உதவ விரையும் அவன் நல் உள்ளத்தை (தெய்வம் மடிதற்றுத்தான் முந்துறும்'' [1023]); கண்டு களைத்திருந் தனர் கடைச் சங்க காலத்துத் தமிழ்ப் பெருமக்கள்.

### திருமகள்

நல்ல விருந்தினர்களை, அகமும், முகமும் மலர வரவேற்று, அவர் விரும்பும் நல்ல உணவுவகைகளை, அவர் விரும்பும் அளவு வழங்கி வாழ்வான் இல்லத்தில், அகமகிழ்ச்சி யோடு வீற்றிருக்கும் செய்யாளாம் திருமகளை,

> ''அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
> நல்விருந்து ஓம்புவான் இல்'' (84)

பிறர்பால் இடங்கொண்டு கிடக்கும், அளவிறந்த பொன், பொருள், புகழ் கண்டு, கண்டு, மனம் பொறாது, பொறாமை கொள்வான் ஒருவனைத் தன் தமக்கையாம் மூதேவிக்கு அடையாளம் காட்டிச் சென்று அவனைப் பற்றிக் கொள்ளப்பணித்து விட்டு, தான் ஒதுங்கிக் கொள்ளும் செய்யவளாம் திருமகளை,

> ''அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
> தவ்வைக்குக் காட்டி விடும் (167)

மடி, அதாவது சோம்பல் என்பதையே அறியாது, எப்போதும் உழைத்துக் கொண்டே இருக்கும் ஒருவன் கால்கள், தான் வீற்றிருக்கும் தாமரை மலரினும் சிறந்தது எனக்கண்டு, தாமரை மலரின் நீங்கி, உழைப்பவன், தாளில் போய் அமர்ந்திருக்கும் திருமகளை (மடியிலான் தாள் உளாள் தாமரையினாள் [617] ); அறமாவது யாது, அறமல்லாதது யாது என்ற தெளிந்த அறிவுடையராக, தாம்

வறியராய் இருக்கும் நிலையிலும், பிறர்பொருளை விரும்பாத சிறந்த அறிவுடையார் யாவர் என அறிந்து; அறிந்தபின் அவர்பால் தான் சென்றடையும் வழியாது என ஆராய்ந்து, ஆராய்ந்து அறிந்த வழி, அந்நல்லாரைச் சென்று அடையும் திருமகளை,

"அறன் அறிந்து வெஃகா அறிவுடையார்ச்சேரும்
திறன் அறிந்து ஆங்கே திரு" (179)

அறிந்திருந்தனர் பழந்தமிழ்ப் பெரியவர்கள்.

மூதேவி, திருமகளின் தமக்கையாகக் கருதப்பட்டாள், பொறாமை கொள்ளும் இயல்புடையானை விட்டுத் தான் நீங்கும் போது ஏற்படும் அவ்வெற்றிடத்திற்குச் சென்று இடங்கொள்ளுமாறு திருமகளால் வழி காட்டப்படுவாள் (மேலே காட்டிய குறள் [167]) கரியநிறமேனி வாய்த்தவளும், முகடிஎன அழைக்கப்படுபவளுமாகிய அம் மூதேவி' சோம்பேறிகளின் மடிகளில் தவழ்ந்து விளையாடுவாள். (மடியுளாள் மாமுகடி என்ப [617]) என நம்பினர் பழந்தமிழர்.

## இந்திரன்

பரந்தகன்ற பேருலகாம் தேவலோகத்தை ஆட்சிபுரிபவனும், கௌதமன் மனைவி அகலிகைபால் ஆசைகொண்டு, அக் கௌதமனால் சபிக்கப் பெற்று, உடலெல்லாம் ஆயிரம் கண்களைப் பெற்றுக் கொண்டவனுமான இந்திரனை அறிந்திருந்தனர் பழந்தமிழர்.

"ஐந்து அவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலும் கரி" (25)

**வான் உலகம்**

,வரம்' என்றும் (24), 'வான், என்றும்(50, 86, 346), 'வானம், என்றும் (353), ' புத்தேளிர் வாழும் உலகு' என்றும் (58), 'புத்தேள் உலகு,என்றும் (213, 234, 290, 966, 1323), மேல் உலகம், என்றும் (222), வழங்கப்பெரும், வானவர் வாழும் உலகைஅறிந்திருந்தனர் அக்காலத்தமிழர்.

யானையை மதம்பிடித்து அலையவிடாது அங்குசத்தால் அடக்கி வைப்பதுபோல, மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளையும், அவை செல்லத் துடிக்கும் இடங்களுக்கெல்லாம் செல்லவிடாது, மனஉறுதியால் அடக்கி வைக்க வல்லான் ஒருவன், வானுலகில்சென்று முளைக்கவல்ல சிறந்த வித்துஆவன். அதாவது வானுலக வாழ்வைப் பெருவன்.

''உரன் என்னும் தோட்டியான் ஓர்ஐந்தும் காப்பான்
வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து (24)

இந்நிலவுலகில், வாழ வேண்டிய முறையில் சிறிதும் வழுவாது வாழ்ந்து காட்டுவான், இந்நிலவுலகத்தவனே எனினும், வானுலக வாழ்வினதாம் தெய்வமாகவே மதித்து வழிபடப்படுவன்,

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன், வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப்படும். (50)

நாள்தோறும் தன் வீடுநோக்கி வரும் விருந்தினரைச் செவ்வனே ஒம்பி அனுப்பிவிட்டு, அடுத்து விருந்தினர் வருவார்களா என வழிமேல் விழி வைத்துக் காத்திருக்கும் ஒருவன், வானுலகத்தவரால் நல்ல விருந்தாளியாக வரவேற்கப்படுவன்.

''செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு (86)

தன்னுடையதல்லாத உடம்பைத்தான் என்றும், தன்னுடையதல்லாத, பொன், பொருள், வீடு, நிலம், போன்றவற்றைத் தன்னுடையதென்றும் எண்ணும் அறியாமை உணர்வை அறுத்து எறிபவன், தேவர்களாலும் அடையமுடியாத நனிமிக உயர்ந்த மோட்ச உலகை அடைவான்.

''யான்எனது என்னும் செருக்குஅறுப்பான்
வானோர்க்கும்
உயர்ந்த உலகம் புகும்'' (346)

இதுவா? அதுவா?; உண்டா? இல்லையா? என்ற ஐயப் பாடாம் மயக்க உணர்விலிருந்து விடுபட்டு, இதுதான் அல்லது அதுதான்; உண்டு அல்லது இல்லை என்ற தெளிந்த அறிவு பெற்றவர்க்கு, அவர் வாழும் இந்நில உலக வாழ்க்கையைக் காட்டிலும், மோட்ச உலக வாழ்க்கை அண்மையினதாகிவிடும்.

''ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து'' (353)

மனைவியர், தம்முடைய கணவராகப் பெற்றவரை கணவன் என்ற பெயரளவில் அல்லாமல், அப்பெயருக்கு ஏற்ற இயல்பெலாம் வாய்க்கப் பெற்றவராகப்பெற்று விடுவராயின், அத்தகைய மனைவியர், புத்தேளிர் வாழும் உலகத்தவர் பெறும், பெரும் சிறப்பு வாய்ந்த வாழ்க்கையைப் பெற்றவராவர்.

''பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர்
பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு'' (58)

தன்னுடையதல்லாத உடம்பைத்தான் என்றும், தன்னுடையதல்லாத, பொன், பொருள், வீடு, நிலம், போன்றவற்றைத் தன்னுடையதென்றும் எண்ணும் அறியாமை உணர்வை அறுத்து எறிபவன், தேவர்களாலும் அடையமுடியாத நனிமிக உயர்ந்த மோட்ச உலகை அடைவான்.

"யான்எனது என்னும் செருக்குஅறுப்பான்
வானோர்க்கும்
உயர்ந்த உலகம் புகும்" (346)

இதுவா? அதுவா?; உண்டா? இல்லையா? என்ற ஐயப்பாடாம் மயக்க உணர்விலிருந்து விடுபட்டு, இதுதான் அல்லது அதுதான்; உண்டு அல்லது இல்லை என்ற தெளிந்த அறிவு பெற்றவர்க்கு, அவர் வாழும் இந்நில உலக வாழ்க்கையைக் காட்டிலும், மோட்ச உலக வாழ்க்கை அண்மையினதாகிவிடும்.

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து" (353)

மனைவியர், தம்முடைய கணவராகப் பெற்றவரை கணவன் என்ற பெயரளவில் அல்லாமல், அப்பெயருக்கு ஏற்ற இயல்பெலாம் வாய்க்கப் பெற்றவராகப்பெற்று விடுவராயின், அத்தகைய மனைவியர், புத்தேளிர் வாழும் உலகத்தவர் பெறும், பெரும் சிறப்பு வாய்ந்த வாழ்க்கையைப் பெற்றவராவர்.

"பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர்
பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு" (58)

வேண்டுவார்க்கு வேண்டும் உதவிகளைச் செய்வதாகிய ஒப்புரவு எனும் செயலே, ஒருவன் செய்யும் செயல்கள் அனைத்தினும் தலையாயது: அத்தகையதொரு வேறுநல்ல செயலை, இந்நில உலகிலும் பெறுதல் இயலாது; தேவர் உலகத்திலும் பெறுதல் இயலாது.

''புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல்அரிதே
ஒப்புரவின் அல்ல பிற'' (213)

இந்நிலவுலகில் ஒருவன் என்றும் அழியாப் பெரும்புகழ் தரவல்ல நற்பணிகளை ஆற்றிவிடுவானாயின், தேவர் உலகில் உள்ள பெரியார்கள், ஆங்கு வாழ்வார்களைப் புகழ மறுத்துவிடுவர்; இவர்களையே புகழ்ந்து பாராட்டுவர்.

''நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு'' (234)

களவாடலைத் தொழிலாக மேற்கொண்டவர்களை, அவர்கள் வாழும் உயிர்வாழ்தற்கு இடமாகிய இந்நில உலகம் வாழவிடாது தள்ளி வைத்துவிடும். மாறாகக், களவாடலைக் கனவிலும் நினையாதவர்களை வானுலகம், தள்ளி வைக்காதது மட்டுமன்று, ஏற்று வாழ்வளிக்கும்.

''கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாறு புத்தேள் உலகு'' (290)

ஒருவன், தன்னை எப்போதும் இகழ்ந்தே பேசுவார் பின்னாலேயே சுற்றிச் சுற்றி வந்து நிற்கும் இழிநிலை. அவனுக்கு இந்நிலை உலக வாழ்க்கையாம் இம்மையிலும், பழியையல்லது புகழைத்தராது; மறுமை வாழ்க்கை எனக் கருதப்படும் தேவருலக வாழ்க்கைக்கும் அவனை அனுப்பி வைக்காது. அங்ஙனமாகவும், இகழ்வார்பின் சென்று நிற்பது ஏனோ?

“புகஇன்றால்; புத்தேள்நாட்டு உய்யாதால்: என்?மற்று
இகழ்வார் பின்சென்று நிலை” (966)

நிலத்தோடு நீர் கலந்தாற்போல, மனம் ஒன்றியிருக்கும் கணவனிடம் ஊடுதலைவிட மனைவிக்கு இன்பம்தருவது, தேவர் உலகத்திலும் இருக்குமோ: இருக்காது உறுதியாக.

“புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தோடு
நீர்இயைந் தன்னார் அகத்து” (1323)

பிறரிடம் ஒரு பொருளை யாசித்துப் பெருதல் ஒரு நல்ல செயலுக்காக எனினும் பெறுதல் தீது தீதுதான். பிறர்க்கு உதவுவதால், வான் உலக வாழ்க்கை வழுக்கிவிடும் என்றாலும் உதவுவதே சாலவும் சிறந்தது,

“நல்லாறு எனினும், கொளல்தீது; மேல்உலகம்
இல்எனினும் ஈதலே நன்று” (222)

இவ்வாறெல்லாம் நம்பிருயிந்தனர் பழந்தமிழ்மக்கள் வானோர் உலகம்பற்றி.

## நரகம்

‘அளறு, (225), ‘ஆரிருள்’ (121), ‚இருள் சேர்ந்த இன்னா உலகம், (243), ‘தீ,(168), என்ற பெயர்களில் நரகை உணர்ந்திருந்தனர் பழந்தமிழர்.

உயிரும், உடலும் ஒன்றி வாழ்கின்ற நிலைமை அவ்வுடலை அழித்து, அவ்வூனைத் திண்மையாகிய தன்மையில் நிற்கிறது; இந்த உண்மையை மறந்து, ஒருவன், உயிரையும், உடலையும் வேறுபடுத்தி, அவ்வுடலின் ஊனைத்தின்று வருவானாயின்: அவ்வாறு தின்றவன் உடலையே முழுமையாகத் தின்றுவிடும் நரகம், அவன் தப்பியும் புறம்போந்து

போய்விடாவாறு, தன் வாயைத் திறவாது மூடிவைத்துக் கொள்ளும்.

''உண்ணாமை உள்ளது உயிர்நிலை; ஊன்உண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு'' (255)

மெய், வாய், மூக்கு, கண், செவி, எனும் ஐம்பொறிகளையும், மனத்தையும் அவை செல்ல விரும்பும் இடம் எல்லாம் செல்லவிடாது அடக்கவல்லவன், அமரர் உலகம் அடைவன். அவற்றை அடக்க இயலாமை, அவனை இருள் நிறைந்த உலகமாப் நரகத்தில் கொண்டுவிட்டுவிடும்.

''அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆர்இருள் உய்த்து விடும்'' (121)

அருள்நிறை நெஞ்சு உடையவர்கள், காரிருள் சூழ்ந்தது; கடுந்துன்பம் தரவல்லதாகிய நகர வாழ்க்கையில் புகுந்து உழலும் நிலை என்றும் வாய்க்காது.

''அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை; இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்'' (243)

பிறர் உடைமை கண்டு பொறாமையாகிய அழுக்காறு என அழைக்கப்படும் ஒப்பு இல்லாத பாவி, அப் பொறாமை உடையவன்பால், இயல்பாகவே இருந்த உடைமைகளையெல்லாம் இல்லாமல் செய்து விடுவதோடு, அவனைக் கொடுந்தீ கொழுந்து விட்டெரியும் நரகத்திலும் தள்ளிவிடும்.

''அழுக்காறு என ஒருபாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்'' (168)

நரகத்தைப்பற்றி இவ்வாறெல்லாம் உணர்ந்திருந்தனர் பழந்தமிழ் மக்கள்.

**யமன்**

வடவர் யமனைக், கூற்றுவன் என்ற பெயரால் அறிந்திருந்தனர் பழந்தமிழர். தனக்குவந்த துயரைத்தாங்கிக் கொண்டு, பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாமையாகிய தவநெறியில் வல்லவராகி விட்டவர்களுக்குக், கைப்பற்றக் கருதிய உயிரைத் தப்பாது கைப்பற்றவல்ல யமனையும் வெற்றி கொள்ள இயலும்.

''கூற்றம் குதித்தலும் கைகூடும், நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு'' (269)

உயிர்களை உணவாக உண்ணும் இயல்புடையவன்தான் கூற்றுவன். அக்கூற்றுவனும், பிற உயிர்களைக் கொள்வதில்லை என்பதைக் கொள்கையாகக்கொண்டு வாழ்கின்றவன் வாழ்நாளைக் குலைக்கமாட்டான்.

''கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான்
வாழ்நாள்மேல்
செல்லாது உயிர்உண்ணும் கூற்று'' (326)

கைப்பற்றக் கருதிய உயிர்களைக் கடுகளவும் தப்பாது கைப்பற்ற வல்லவன் கூற்றுவன்; அக்கூற்றுவனே கடுஞ்சினம்கொண்டு எதிர்த்துவரினும், அஞ்சி மூலைக்கு ஒன்றாக ஓடிவிடாது, ஆங்காங்குச் சிதறிக்கிடந்த நிலையிலிருந்து ஒன்று திரண்டுவந்து அக்கூற்றுவனை எதிர்த்துப் போரிட வல்லதே படையாகும்.

''கூற்றுடன்று மேல்வரினும், கூடி எதிர்நிற்கும்
ஆற்றல் அதுவே படை'' (763)

பேராண்மை வாய்ந்தான் ஒருவனுக்கு, வல்லமையே இல்லாதான் ஒருவன் கேடுசெய்தல், காலம் வரும்வரை காத்திருக்கும் கூற்றுவனை, அக்காலம் வருவதற்கு முன்னரே தானே கைதட்டி அழைத்தது போன்றதாகும்.

''கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்'' (894)

கூற்றுவன்பற்றி, பழந்தமிழர் கொண்டிருந்த கொள்கை இது.

## வள்ளுவரின் கடவுட் கொள்கை

ஆரியச் சமயக் கொள்கைகள், இவ்வாறு எல்லாம் தமிழகத்தில் ஆழமாக வேரூன்றிக்கிடந்த காலத்தே தோன்றிய திருவள்ளுவர், பழந்தமிழர் உள்ளத்தில் ஊறிக் கிடந்த அவ்வுணர்வுகளையே, அத்தமிழர்களின் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் கருவிகளாகப் பக்குவமாகக் கையாண்டுள்ள அவர் கைவண்ணத்தை இனிக்காண்போம்.

''தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை'' (43) என்ற

குறளில், தெய்வத்திற்குத் தனியானதொரு இடங்கொடுத்து விடவில்லை; தென்புலத்தார், விருந்து, ஒக்கல், தான் என்ற நல்லவரோடு சேர்த்து, இரண்டாம் இடத்தையே கொடுத் துள்ளார்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான்உறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்'' (50) என்ற

குறள் மூலம், வான்உறையும் தெய்வம் எனத்தனியே இல்லையே; வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்துவிட்டால், நீயும் வானுறையும் தெய்வமாகிவிடலாம் என்று கூறியதன் மூலம், ஒரு வாழ்க்கைநெறிச் சட்டத்தை வகுக்கவே தெய்வத்தைத் துணைக்கு அழைத்துள்ளார்.

''தெய்வம் தொழாஅள்; கொழுநன் தொழுதுஎழுவாள்
பெய்எனப் பெய்யும் மழை'' (55) என்ற

குறளில் மழையைப்பார்த்து ''மழையே பெய்'' என்று தெய்வத்தைத் தொழுபவர்கள் சொன்னால்தான் மழை பெய்யும் என்பது இல்லை; தன் கணவனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைக் குறைவற ஆற்றுவதாம், கணவனைத் தொழுதெழும் ஒருநல்ல மனைவி, மழையைப் பார்த்து ''பெய்'' என்று சொன்னாலும், அம்மழை தட்டாது பெய்யும், எனக் கூறியதன்மூலம், மனைவியின் கடமைக்கே பெருமை சேர்த்துள்ளார்.

''தெய்வத்தான் ஆகாது எனினும், முயற்றிதன்
மெய்வருத்தக் கூலி தரும்'' (619) என்ற குறளில் செய்துமுடிக்க முயன்ற ஒரு செயல், தெய்வத்தின் துணையை நம்பியிருந்தமையால், ஒருவேளை முடியாமல் போனாலும் போகக்கூடும்; ஆனால் மெய்வருந்த முயன்றால், முற்றிலும் முடியாமல் போனாலும், உழைத்த அளவிற்காவது பயன்கிடைக்கும் எனக் கூறியதன் மூலம், கடவுள் நம்பிக்கையைப் பின்னுக்குத் தள்ளிக் கடமை உணர்வுக்கு முன்னிடம் தந்துள்ளார்.

''ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்'' (702) என்ற குறளில், மனிதனைக் காட்டிலும் உயர்ந்த ஓர் இடத்தைத் தெய்வத் திற்குக் கொடுத்து விடாமல், ஒருவர் உள்ளத்தில் உள்ளதை உள்ளவாறே உணரவல்ல வன்மை ஒருவனுக்கு இருக்குமேல், அவன் தெய்வமாகவே மதிக்கப்படுவான் எனக்கூறியதன் மூலம், தெய்வத்தையும், மனிதனையும் ஒருபடித்தாகவே மதித்துள்ளார்.

## வள்ளுவரும் திருமாலும்

''குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந்துறும்'' (1023) என்ற குறட்பாவில்

தான்பிறந்த குடியை எல்லா வகையாலும் உயர்த்தவேண்டும் என விரும்பியவன் ஒருவன், அதற்காக மடியுடுத்துக் காட்சி அளித்துக்கொண்டு நிற்கும் திருமாலைச் சுற்றிச்சுற்றி வராமல், கடின உழைப்பில் இறங்கி விடுவனாயின், மடியுடுத்தி நிற்கும் அம்மால், தன் மடியை வரிந்து கட்டிக் கொண்டு, ஓடி ஓடிவந்து, அவ்வுழைப்பானுக்கு உறுதுணையாகத் தானும் உழைப்பன் எனக் கூறியதன்மூலம் கடவுள் வழிபாட்டினும் கடமைக்கே முதலிடம் தந்துள்ளார்.

''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅயது எல்லாம் ஒருங்கு'' (610) என்றகுறட்பாவில் வானளாவும் பேருருவக்கொண்டு, திருமால், தன்இரண்டு திருவடிகளால், அளந்துகொண்ட மூன்று உலகங்களையும், மடி, அதாவது சோம்பல், என்ற ஒன்றை விட்டுவிட்ட ஒருவன் பெற்றுவிடுவான் எனக் கூறியதன்மூலம், சோம்பல் இன்மைக்கே முதலிடம் கொடுத்துள்ளார்.

''தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு'' (1103) என்ற குறட்பாவில், தாமரைக்கண்ணான் உலகு எனப்படும் வைகுந்தத்தில் பெறும் இன்பமே பேரின்பம் என்பர் பலரும்! அந்த இன்பம், ஒருவன், தான்விரும்பும், தன்னை விரும்பும் ஒரு பெண்ணின் மெத்தென்ற தோள்மீது படுத்து உறங்கும் போது பெறும் இன்பத்தைக்காட்டிலும் பெரிதாகுமோஎன எதிர்மறை வினாவோடு இராது உறுதியாக என விடையளித்ததன்மூலம், வைகுந்த இன்பத்திற்கு இரண்டாம் இடமே கொடுத்துள்ளார் வள்ளுவர்.

## வள்ளுவரும் திருமகளும்

''அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்'' (84)

என்ற குறட்பாவில், "நல்ல விருந்தினர்களை அகமும் முகமும் மலர வரவேற்று, அவர் விரும்பும் நல்ல உணவை, அவர் விரும்பும்அளவு வழங்கி வாழ்பவன் இல்லத்தில், திருமகள் மகிழ்ச்சியோடு வீற்றிருப்பாள்" எனக்கூறியதன் மூலம், திருமகளைத், திருமாலின் உந்திக் கமலத்திலிருந்து இறக்கிக் கொண்டுவந்து, இந்நிலவுலகத்தான் ஒருவன் இல்லத்தில் குடிவைத்துவிட்டதோடு; திருமகளைத் தேடி நீ ஓடாதே; விருந்தினர்களை ஓம்பு; திருமகள் உன்னைத் தேடி வந்தடைவாள் என,அவளை விருந்தாற்றல் பண்பிற்குப் பிற்பட்டவளாகவும் ஆக்கிவிட்டார் வள்ளுவர்.

"மடியிலான்தாள் உளாள் தாமரையினாள்" என்ற குறட்பாவில் (617), மடி, அதாவது சோம்பல் என்பதையே அறியாது எப்போதும் உழைத்துக் கொண்டேயிருக்கும் ஒருவன் கால்கள், தான்வீற்றிருக்கும் தாமரை மலரினும் சிறந்தாகக்கொண்டு, அத்தாமரை மலரை விடுத்து, உழைப்பவன் கால்களில்போய் அமர்ந்து கொள்வாள் திருமகள் எனக்கூறியதன் மூலம், திருமகள் வீற்றிருக்கும் தாமரை மலரைக்காட்டிலும், உழைப்பவன் கால்களுக்கு முதலிடம்கொடுத்து, கடவுள் வழிபாட்டினும், கடமையாற்றலுக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

"அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு" (179) என்ற குறட்பாவில் அறமாவது யாது, அறமல்லாதது யாது, என்ற தெளிந்த அறிவு வாய்க்கப்பெற்று, தாம் வரியராய் இருக்கும் நிலையிலும், பிறர்பொருளை விரும்பாத சிறந்த அறிவுடையார் இந்நிலவுலகில் யாவர் என ஆராய்ந்து அறிந்து, அறிந்தபின் அவரைச் சென்றடையும் வழி யாது என ஆராய்ந்து, ஆராய்ந்து அறிந்தவழி, அந்நல்லாரைச் சென்றடைவாள் திருமகள் எனக் கூறியதன்மூலம்'

திருமகளைத் தேடி நீ அலையாதே; உள்ளது போதும் என்ற மனநிறைவு கொள்; பிறர் பொருளைக் கவரக் கனவிலும் கருதாதே: அது போதும்; திருமகள், உன்னைத் தேடி அலைந்து உன்பால் வந்துசேர்வள் என உரைத்து, பிறர்பொருள் வெஃகாமைக்கே விழுமியதோர் இடம் அளித்துள்ளார்; திருமகளுக்கு அன்று.

## வள்ளுவர் பார்வையில் இந்திரன்:

இந்திரனை அறிந்திருந்தனர்; அமரர் தலைவனாக, வழிபடத்தக்கவனாக அல்ல. பரந்தகன்ற பேருலகாம் தேவலோகத்தின் தலைவன்தான். எனினும், கௌதமன் மனைவி அகலிகைபால் ஆசைகொண்டு அக்கௌதமனால் சபிக்கப்பெற்று உடலெல்லாம் ஆயிரம் கண்பெற்ற இந்திரன் (குறள்:25) எனக்கூறியதன் மூலம், பிறர்மனை நயப்பவனுக்கு எத்தகைய அவக்கேடு நேரும் என்பதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகக் காட்டவல்ல இழிதகை யோனாக!

## வள்ளுவர் கண்ட வான்உலகம்:

வரன் (24), வான் (50,86,346), வானம் (353,) புத்தேளிர் வாழும் உலாகு (58), புத்தேள் உலகு (213,234, 290,1323), மேல் உலகம் (322) என்றெல்லாம் வழங்கப் பெறும் வானவர் வாழும் உலகை அறிந்திருந்தனர் என்பது உண்மை.

அறிந்திருந்தனர் என்பது உண்மை; ஆனால், அறிந்த அதை, அவர்கள் எந்த அளவு மதித்தனர்? சென்று அடையலாகா இடம் என்றா? சென்று அடைய வேண்டிய இடம் என்றா? அடைந்தே தீர வேண்டிய இடம் என்றா? சென்று அடைந்தால்தான், இம் மண்ணுலகில் பிறந்ததன்

பயன் நிறைவேறியதாகும் என்றா? இவ்வினாக்களுக் கெல்லாம், எதிர்மறை விடைகளையே வழங்கியுள்ளார் வள்ளுவர். விளக்கங்கள் இதோ!

''யானையை அங்குசத்தால் அடக்கிவைப்பதுபோல் ஐம்பொறிகளை, உள்ளத்து உறுதியால் அடக்கிவைப்பவன், வானுலக வாழ்வைப் பெறுவன் (குறள்-24); இவ்வுலகில் வாழவேண்டிய முறையில் வாழ்பவன், வானுலகவாழ் தெய்வ மாகவே மதிக்கப்படுவன் (குறள்-50); வந்த விருந்தினர்களை ஓம்பிவிட்டு, வரும் விருந்தினர்களை எதிர்நோக்கிக் காத்திருப்பன், வானவர்க்கு விருந்தாவன் (குறள்-86); தான், தனது என்ற தன் உணர்வை விட்டுஎறிந்தவன், வானவர்களும் அடைய இயலா மோட்ச உலகை அடைவன் (குறள்-346); ஐயம் திரிபு அறக்கற்ற தெளிந்த அறிவுடையவனுக்கு, வானுலக வாழ்வு எளிதில் கிடைத்துவிடும். (353); வேண்டு வார்க்கு வேணடும் உதவிகளைச் செய்வதாகிய நற்செயல் இந்நிலவுலகில்தான் உண்டு; தேவர் உலகில் அதைக் காணவும் இயலாது (குறள்—213); ஒருவன் இந்நிலவுலகில், நல்ல பல அறப்பணிகளை ஆற்றிவிடுவானாயின், தேவர்கள் ஆங்குள்ள தேவர்களைப் புகழ்வதுவிடுத்து, இவனையே புகழ்வர் (குறள் 234 என பல குறட்பாக்களில் வானுலகத்தின் தன்மையையும் நிலவுலகின் மேன்மையையும் பற்றிய தம் கருத்துக்கலை எடுத்துரைத்துள்ளார்.

மேலும், ''களவாடுவானுக்கு, இந்நிலவுலகம் இடம் அளிக்க மறுக்கும்போது, களவாடலை அறியாதானை, வானுலகம் மறவாது வரவேற்று இடமளிக்கும்'' (குறள்:290); ஒருவன், தன்னை இகழ்வார் பின்னாலேயே சுற்றிச் சுற்றி வரின், அது இம்மை, மறுமைகளில் பழியையேதரும்; அதுமட்டும் அன்று, வானுலக வாழ்க்கைக்கும் அவனை அனுப்பிவைக்காது. (குறள்:966); பிறர்க்கு, பிற

உயிர்களுக்கு, உதவுவதற்காக என்று யாசிப்பதால், வானுலக வாழ்வே அவனுக்கு மறுக்கப்படும் என்றாலும் யாசிப்பதே நல்லது (குறள்:222); என்றெல்லாம் கூறியிருப்பதன் மூலம், கடமைநெறி உணர்ந்து, வாழ்வாங்கு வாழ்ந்துகாட்டும், மக்கள்வாழும், இம்மண்ணுலகினும், அவ்விண்ணுலகம் விழுமியதன்று என்பதை அடித்துக் கூறியுள்ளார் வள்ளுவர்.

## திருக்குறளில் கடவுள் வழிபாடு

ஆக, இதுவரை கூறிய விளக்கங்களால், கடவுள் வழிபாட்டு நிலையினும், கடமை வழுவா நிலையையே திருவள்ளுவர் வற்புறுத்தியுள்ளார் என்பது தெளிவாகிறது.

அங்ஙனமாயின், கடவுள் வாழ்த்து என்ற தலைப்பின் கீழ்ப் பத்துகுறட்பாக்களை அளித்திருப்பானேன்? அவற்றை அளித்த அவரைக், கடவுள் நெறியினும், கடமை நெறிக்கே முதலிடம் அளிப்பவர் எனக் கூறல் பொருந்துமா எனக்கேட்கக்கூடும்.

கேள்விமுறையானது தான்; ஆயினும், அக்குறட்பாக்கள் பத்தையும் ஒருமுறை உற்று நோக்குங்கள். வள்ளுவர் உள்ளத்தை ஆங்கே காணலாம்.

ஆம், கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்தில் பத்து திருக்குறள்களைப் பாடிவைத்துள்ளார் திருவள்ளுவர். ஆனால், மேலேகாட்டியவாறு, தன்குறட்பாக்கள் சிலவற்றில் திருமாலையும், திருமகளையும், இந்திரனையும், யமனையும், குறிப்பிட்டிருப்பதுபோல், கடவுள் வாழ்த்தாகவரும் பத்து குறட்பாக்களில், எந்தக்குறளிலும், அத்தகைய தெய்வத் திருமேனியுடைய கடவுள் எதையும் குறிப்பிடவில்லை.

மாறாக, முதற்குறட்பாவில், ''ஆதிபகவன்'' என்ற ஒருவனையும், மூன்றாவதுகுறளில்'' ''மலர்மிசை ஏகினான்''

என்ற ஒருவனையும், எட்டாவது குறளில் ''அறவாழி அந்தணன்'' என்ற ஒருவனையும் குறிப்பிட்டது தவிர்த்து, ஏனைய குறட்பாக்களில், ''வாலறிவன்''; வேண்டுதல் வேண்டாமை இலான்'', ''இறைவன்'', ''பொறிவாயில் ஐந்து அவித்தான்'', ''தனக்கு உவமை இல்லாதான்'', ''எண்குணத்தான்'', எனச், சிலபல பண்புகளை உடையவர்களையே குறிப்பிட்டுள்ளார்.

வித்தின்றி முளை இல்லை என்ப; பொருள் ஒன்று உண்டேல், அதைத் தோற்றுவித்த ஒன்று இருக்க வேண்டும் என்ற வாத அடிப்படையில், உலகம் இருக்கவே, அதைத் தோற்றுவித்த ஒருவன் இருத்தல்வேண்டும் என உணர்ந்ததன் விளைவால், ஆதிபகவனைக் கூறினார். உருவம் அற்றவன் அவன். ஆகவே, அது, ஆரிய வழிபாட்டு அடிப்படையில் வந்த கடவுள் அன்று.

> ''எத்துணையும் பேதம் இன்ற; எவ்வுயிரும்
> தம்உயிர் போல்எண்ணி, உள்ளேஒத்து
> உவக்கின்றார், யாவர்
> அவர்உளந்தான், சுத்தசித்துருவாய் எம்பெருமான்
> நடம்புரியும் இடம் எனநான் தெரித்தேன்''

என்றார் வடலூர்வள்ளல் பெருந்தகையாளர். ஆகவே அத்தகு நல்லார் உள்ளத்துக்கே முதல் இடம் அளித்து 'மலர்மிசை ஏகினான்' என்றார்; இங்கும் வடிவம்இல்லை. ஆரிய வழிபாட்டு நெறியோடு கலந்தது அன்று.

உலகில் நின்று நிலைபெற வேண்டியது அறம்; அவ்வறம் கடல்போல், ஆழ்ந்து அகன்ற பேரறமாதல் வேண்டும் என்ற அறவுணர்வால் ''அறவாழி அந்தணன்'' என்றார்; 'அந்தணர் என்போர் ஆரியப் பார்ப்பனர் அல்லர்.

அந்தணர் என்போர் அறவோர்!'' காரணம், மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் (30) என்றார் பிறிதோரிடத்தில். ஆக, அறவாழி அந்தணனும், ஆரியக் கடவுள் அல்லன்: அறமும், செந்தண்மையும் நிறைந்த செம்மல்.

''அறிவுடையார் ஆவது அரிவார்'' (427) ''அறிவுடையார் எல்லாம் உடையார்'' (429) என்றெல்லாம் அறிவுடையவர்களின் பெருமை பேசுபவர் திருவள்ளுவர். ஆகவே, அவ்வறிவுடையார், வாலறிவுடையார், வழிபடத் தக்கவராவர் என்றார். ஆகவே ஆறிவுடைமையாம் கடமைக்கே முதலிடம்; ஆரியக் கடவுளுக்கு அன்று.

''சுழலும் இசை வேண்டி'' (777); ''நலம் வேண்டின் நாணுடைமை வேண்டு'' (960); ''குலம் வேண்டின் பணிவுடைமை வேண்டு'' (960); எனப்படுவன இவை எனவும்; ''வேண்டற்க வெஃகி ஆம் ஆக்கம்'' (177); ''வேண்டற்க வென்றிடினும் சூதினை'' (931); ''இசை வேண்டின், உயிர் வேண்டாதே'' (777); ''இசை வேண்டா ஆடவர் நிலக்குப் பொறை'' (1003) என உலகத்தவர் நல்லவனாக வாழ வேண்டின், அவன் வேண்டுவயாவை; வேண்டத்கூடாதன யாவை என இலக்கணம் வகுத்ததோடு.

> ''வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டுஇல்லை
> யாண்டும் அஃதுஒப்புது இல்'' (363)

வேண்டாமை என்னும் செருக்குவிறல் (வெற்றி) ஈனும்என வேண்டாமையின் விழுச்சிறப்பையும் எடுத்து விளக்கியுள்ளார் வள்ளுவர்.

இது உலகில்வாழும் எல்லார்க்கும் பொருந்தும் விதி முறைகள். ஆக, வேண்டுதல், வேண்டாமை ஆகிய

இரண்டுமே, ஒரோவழி ஆக்கமும், ஒரோவழி அழிவும் தர வல்லவனாம் என்பது இதனால் தெளிவாயிற்று; ஆகவே, வேண்டுதல், வேண்டாமை ஆகிய இரண்டுமே இல்லாதவர்; நனிமிக உயர்ந்தவராவர்; அத்தகையார் உலகத்தவர் அனைவராலும் வழிபடத்தக்க விழுமியோர் ஆவர். ஆகவே, வள்ளுவர் வகுத்த "வேண்டுதல் வேண்டாமை இலான்" (4), இம்மண்ணுலகு வாழ் மனிதனே அல்லது விண்ணுலக வாழ்தேவன் அல்லன்.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன், மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்" (388) என்றார் வள்ளுவர். "திருவுடைமன்னரைக்காணின், திருமாலைக் கண்டேனே என்றும்" என்றார் பெரியாழ்வார். ஆக, திருக்குறள், அறத்துப்பாலில் எடுத்துக்கூறிய தனிமனிதப் பண்பாடுகளையும், பொருட்பாலில் எடுத்துக் கூறிய, அரசர்க்கே உரிய பண்பாடுகளையும், கொண்டிருப்பவனும், இறைவன் (அதாவது)கடவுளாக மதிக்கப்பெறுவன். ஆகவே, குறட்பா ஐந்திலும் பத்திலும் கூறப்பட்டிருக்கும் இறைவன், முறைவழி நாடாளும் மன்னவனே அல்லது; விண்ணுலகு வாழ் வேந்தன் அல்லன்

மண்ணுலகில் வாழ்ந்தவன் கௌதமன்; ஆனால் ஐந்து ஆசைகளையும் அடக்கியவன்: விண்ணுலகோரின் வேந்தன் இந்திரன். ஆனால் ஐந்து ஆசைகளையும் அடக்காதவன். அதனால், அவன், கௌதமனால் சபிக்கப்பட்டு, ஆயிரம்கண் பெற்ற நிகழ்ச்சியை,

"ஐந்துஅவித்தான் ஆற்றல்அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலும்கரி" (25)

எனக் கூறியுள்ளார். ஆகவே, ஐந்தைஅவித்த பெரியோன், இம்மண்ணுலகத்தவனே எனினும், விண்ணுலத்தவன்போல்

வழிபடத் தக்கவன்என்பதால், பொறிவாயில்'ஐந்தவித்தான் (6) எனவள்ளுவர் வகுத்த கடவுள் ஆரிய வழிபாட்டுக் கடவுள் அன்று.

''ஈடும் எடுப்பும் இல்லாதவன்– ஈசன்'' என்பது திருவாய் மொழி; அத்தகுபெருமை உடையார் யாவரே ஆயினும், அவர்கள் இறைவனாகவே வழிபடத்தக்கவராகவே மதிக்கப் பெறுவர் ஆதலில், வள்ளுவர் கூறும் ''தனக்குஉவமை இல்லாதான், (7) மண்ணுலகிலும் காணலாம் மக்கள் இனத்தவனே, என்றால், அது தவறாகாது,

தன்னைத் தன்கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ளுதல், தூய்மை உடையவனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பந்தபாசங்கள் இல்லாமை; பொருள் உடைமை; முடிவிலா ஆற்றல்; வரம்பில் இன்பம் உடைமை, ஆகிய இப்பண்புகள் எட்டும் மண்ணுலக மானிடனிடத்திலும் இடம் பெற்றிருக்கக்கூடியனவே; ஆகவே என்குணத்தானைத் தேவர் உலகில் தேடத் தேவையில்லை; ஈண்டே கண்டுகொள்ளலாம். ஆகவே, என்குணத்தானும் ஆரிய வழிபாட்டுக் கடவுள் அல்லன்.

ஆக, மனிதன் மனிதனாக, வாழ்வாங்கு வாழ என்னென்ன பண்புகள் தேவையோ, அப்பண்புகளையே அவற்றை உடையவனாக உருவகித்துக் கூறியிருப்பதே வள்ளுவரின் கடவுட் கொள்கையாம்.



# 3. வள்ளுவர் வளர்த்த மரஇனமும் மாவினமும்

இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவர் வள்ளுவர். அதனால், புல், பூண்டு, மரம், செடி, கொடி, முதலாம் மரவகைகளையும், ஊர்வன, நடப்பனவாகிய மா வகைகளையும், பறப்பனவற்றையும் அறிந்து, அறிந்த அவற்றைத், தம் குறளில், பொருள் விளக்கத்துணையாக, ஏற்ற இடங்களில், ஏற்றவாறு எடுத்தாண்டுள்ளார்.

**எள் :**

நெல்லரிசி, புல்லரிசி, வரகு, தினை, சாமை, சோளம், போலும் கூலவகைகளில் நனிமிகச்சிறியது எள். அவ் வெள்ளை அடுக்கி வைத்தாற்போல் அகத்தே அடக்கி வைத்திருக்கும் காயும் சின்னம் சிறிது: அக்காய் முற்றிய நிலையில் அகத்தேஉள்ள கறுத்த எள் புறத்தே வெளிப்பட வெடிக்கும் அக்காயின் வாயோ, நனிமிகச்சிறியது. அப்பிளவு கண்ணுக்கும் புலப்படா அத்துணைச் சிறியது.

அந்தப்பிளவை, வள்ளுவர், மிகப்பெரிய, அரிய உண்மையை விளக்கப் பயன்கொண்டுள்ளார். உட்பகை. கண்ணுக்குப்புலப்படாது; கருத்தையும் குருடாக்கும் புறத்தே, உற்றார் போலவும், உறவினார் போலவும். நட்டார், நல்லார் போலவும் நடித்துக்கொண்டே, அகத்தே வளரும்பகை, தொடக்ககாலத்தில் மிகமிகச்சிறிதே எனினும், காலப்போக்கில், பெருகி, அப்பகைக்கு உள்ளானவர், எவ்வளவு பெரியவல்லவராயினும் இல்லாமல் செய்துவிடும்; அரம் சிறியதுதான்; ஆனால் அது கடின இரும்பையும் அறுத்துத் துண்டாடிவிடும். அது போன்றதே இது.

அத்தகையபேரழிவு தரும் பேராற்றல் வாய்ந்த உட்பகையின் தொடக்ககாலச் சிறுமையை விளக்க வள்ளுவர்க்கு, ஒருபொருள் தேவைப்பட்டது. எவ்வளவு சிறியபொருளையும், அதன் உருவச்சிறுமை கண்டு புறக்கணிப்பவர் அல்லர் அவர். அதனால் வடிவில்சிறிய' எட்காயின், வாய்வெடிப்பைத் தேடிக்கொண்டார்.

''எட்பகவு அன்னசிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு'' (889)

என்ற குறலில் இடம்கொடுத்து விட்டார்.

புல்:

நீர் சிறிதேகிடைக்கினும் தலைகாட்டி, அதுசிறிதே வற்றினும் சுருண்டுபோகும் மென்மை வாய்ந்தது புல். ''புல்லறிவு'' (சிற்றறிவு) (331); ''புல்அவை'' (அறிவிலார் கூட்டம்) (719,846) என்பனபோலும் இடங்களில் ஆளப்பட்டு இழிக்கப்படுவது. அந்தப் புல்லை, எவ்வளவு பெரும் பொருளை விளக்கக் கையாண்டுள்ளார் வள்ளுவர் காண்க.

மழையின் சிறுதுளி விழவில்லை என்றால், புல்லே தலை காட்டாது என்ற நிலையில், மழையின்றி வாழமாட்டா, வான்நோக்கிவாழும் உலகத்துப் பலகோடி உயிர்களின் நிலை என்னாகும், என்ற கேள்வியை எழுப்புவுதன் மூலம், மழையின் பெருமையைக் காட்டக் கையாண்டுள்ளார் புல்லை.

''விசும்பின் துளிவீழின் அல்லால்மற்று ஆங்கே,
பசும்புல் தலைகாண்பது அரிது'' (குறள்-16)

கரும்பு:

கயவர்; எனினும் கணக்கிலாச் செல்வத்திற்கு அதிபதி. செல்வம் பிறர்க்குப் பயன்பட்ட வழியே அதற்குச் சிறப்பு.

செல்வத்தின் இவ்வியல்பை எடுத்துக்கூறிய அளவிலேயே, வருவார்க்கெல்லாம் வாரிவழங்கிவிடுவாரா கயவர் என்றார் இல்லை. அவர்களை வருத்தினால் அல்லது, கொல்வது போலும் கொடுந்துயரைக் கொடுத்தால் அல்லது, அவர்பால் உள்ள செல்வம் வெளிவராது! இந்த உண்மையை விளக்க, இனிய சாற்றை நிறையக்கொண்டது: அச்சாற்றைக் காய்ச்சினால், கருப்பட்டியும், கற்கண்டும் தரவல்லது; ஆனால் அவற்றைத் தானேகொடுத்துவிடாது, தன்னை ஆலையில், இட்டு இறுகக் கசக்கிய வழியே பயன்தர வல்லதாம், கரும்பு கைகொடுத்தது வள்ளுவர்க்கு. "கரும்புபோல் கொல்லப் பயன்படும் கீழ்" (குறள்-1078)

குன்றி:

நல்லவர்போல் காட்சி நல்குவார் அனைவரும் நல்லவர் ஆகிவிடார். உற்று நோக்கினால், அவருள் சிலர், அகத் தூய்மை அற்றவராகவே இருப்பதை அறியலாம் இது உலகியல். நல்லவர்போல் நடிக்கும் நல்லவர் அல்லார் நடமாடும் உலகம் இது. இந்த உண்மையை விளக்க, திருவள்ளுவர்க்குத் துணைசெய்தது, பார்த்தஅளவில் கண்களுக்குப் பளிச்செனத் தன்செந்நிறத்தை மட்டுமே காட்டி, கையில் எடுத்து உற்றுநோக்கிய வழி, முனையில் உள்ள கரிய நிறத்தைக் காட்டும் குன்றிமணி.

"புறம்குன்றி கண்டனையரேனும், அகம்குன்றி
மூக்கில்கரியார் உடைத்து" (குறள் 277)

மலைபோல் நிலைகுலையா மாந்தர்கள்தான்; ஆனால் அவர்களும், நிலைகுலைவதற்குக் காரணமாம் செயல் பாட்டில் சிறிதே செய்துவிடுவாராயின், மடுப்போல் தாழ்ந்து போவர். இந்த உண்மையை விளக்கும் குறட்பாவில், மாந்தரின் உயர்ந்த நிலையை உணர்த்த, குன்று கை

கொடுத்ததுபோல, நிலைகுலைதற்குக் காரணமாய் அவர் செய்த செயலின் சிறுமையை உணர்த்த குன்றி கை கொடுத்துள்ளது.

''குன்றின் அனையாரும் குன்றுவர், குன்றுவ
குன்றி அனைய செயின்'' (965)

## தினையும் பனையும்:

உருவத்தால் சிறியது தினை; உருவத்தால் பெரியது பனை. தினை, பனைகளின் சிறுமை, பெருமைகளை உணர்த்த, திருவள்ளுவர் அவற்றை இருகுறட்பாக்களில் கையாண்டுள்ளார்.

''தினைத்துனை நன்றிசெயினும், பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரிவார்'' (104)

''தினைத்துணையும் ஊடாமை வேண்டும்
பனைத்துணையும்
காமம் நிறையவரின்'' (1282)

## நெருஞ்சி:

நிலத்தில் படரும் நெருஞ்சி, மலரும் பருவத்தில் சின்னஞ் சிறு பச்சிலைகளுக்கிடையே, மஞ்சள்நிற மலர்களை மலர்ந்து காட்டும் காட்சி கண்ணுக்கு விருந்தாகும். மலர்ந்து கிடக்கும் போது அது கண்களுக்கு நன்கு புலப்படும். ஆனால், ஈன்ற சின்னஞ்சிறு காய்கள் முற்றிக்கிடக்கும்போது, இலைகளும் உதிர்ந்துபோக, செடியே கண்ணுக்குப் புலப்படாது. புலப்படாநிலையில், அச்செடிமீது அறியாது அடிவைத்து விட்டால், அம்மம்ம! முற்றிய காயின் முட்கள், உள்ளங் காலில் குத்தி கொடுந்துன்பம் தந்துவிடும்.

''நெருஞ்சியின் இயல்புஇது. ''சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர்,முட் பயந்தாங்கு''

என்பது குறுந்தொகை (202)

நெருஞ்சி முள்ளின் இக்கொடுமையை உணர்ந்த வள்ளுவர், அதன் துணையை நாடி இருக்கும் இடம் நனிமிக நயத்தற்குரியது.

தான் காதலித்த ஒரு பெண்ணின் ஒவ்வோர் உறுப்பு நலத்தையும் நாவாரப் பாராட்டுகின்றான் ஓர் இளைஞன். அவ்வாறு பாராட்டும் நிலையில், அவள் காலடியைப் பாராட்டு வதாக ஒரு குறள். மலர்களில் மென்மையானது அனிச்சமலர் (அதன் இயல்பு பின்னர் தனியே விளக்கப்படும்). அதேபோல், பறவைகளின் இறகுகளில் நனிமிக மென்மை யானது அன்னப்பறவையின் இறகு. படுக்கை மெத்தென இருக்க அன்னத்தின் தூவியைப் பரப்புவது வழக்கம். (''அன்னத் தூநிறத் தூவி, இணையணை மேம்படப்பாயணை இட்டு'') நெடுநல்வாடை (132-133); ''சேக்கையுள் துணை புணர்அன்னத்தின் தூவி மெல்லணை அசைஇ'' கலி: 72: 1-2).

மாதர்கள் அடியின் மென்மைக்கு, உவமையாக, இவ்விரு பொருள்களையும் கூறுவது புலவர்களின் பண்பு. ஆக, மென்மைக்குப் பெயர்போன அனிச்சம்பூவும், அன்னத்தின் தூவியும்கூட, என் காதலியின் காலடிக்கு நெருஞ்சிமுள் போன்றதாம், எனக்கூறி, அவன் காதலியின் மென்மைத் தன்மையை மேலும் சிறப்பித்துள்ளான், எனப்பாடியதன் மூலம், நெருஞ்சிக்கு நல்லதோர் இடத்தைத் தேர்ந்து அளித்துள்ளார்.

> ''அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
> அடிக்கு நெருஞ்சிப் பழம்'' (1120)

என்பது அத்திருக்குறள்.

வள்ளிக்கொடி:

வள்ளிக்கொடி, வற்றா நீர்வளம் வேண்டுவது. நாள்தோறும் நீர் பாய்ச்சவேண்டியது. ஒருநாள் மறக்கினும் வாடிவிடும் இயல்புடையது. அத்தகு வள்ளிக்கொடியின் அடிவேரையே அறுத்துவிட்டால் என்னாம்: நீரே யூகித்துக் கொள்க.

வள்ளிக்கொடியின் இம்மெல்லியல்பை, தான்செய்து விட்ட ஒரு தவறு காரணமாகத் தன்னோடு ஊடிப்பிணங்கி இருக்கும் தன்காதலியைக் கூறுவன கூறி, அவள் பிணக்குத் தீர்க்கத் தவறிய ஒருகாதலன் செயலுக்கு உவமைகாட்ட எடுத்தாண்டுள்ளார்.

> ''ஊடிய வரை உணராமை வாடிய
> வள்ளிமுதல் அரிந் தற்று'' (1304)

### மரங்கள்

வள்ளுவர் மரங்களின் இனத்தையே அறிந்துள்ளார், ஆனால், அவர், தம்குறளில் கூறியுள்ள மரங்கள் சிலவே அவை, நச்சுமரம், பயன்மரம், மருந்தாம்மரம், முள்மரம் ஆகியன.

நச்சுமரம்

ஊர்நடுவே, ஓங்கி வளர்ந்த, நன்குதழைத்த நச்சுமரம் ஒன்று நிற்குமாயின், அதனை எவரும் விரும்பார் என்பது மட்டும் அன்று; அறியாதே, அதன் இலையையோ,பூவையோ, பட்டையையோ யாரேனும் தின்றுவிடுவராயின், உண்டார் உயிரையே போக்கிவிடும் .நச்சுமரத்தின் இயல்புஇது.

ஊரில்உள்ள ஒருவராலும் விரும்பப்படாதவன் மட்டும் அன்று. அனைவராலும் வெருக்கப்படுவன்; அதாவது ஊருக்கே பகைவன், அத்தகையான்பால் பெருஞ்செல்வம்

குவிந்து விடுமாயின், அது, அவ்வூராரால் விரும்பிடாது வெறுக்கப்படும் என்பது மட்டும்மன்று, ஒரோவழி அவர் அழிவுக்கு, அது பயன்படுத்தப் பெறவும்கூடும் இத்தகு பொருள் இயல்பை விளக்க, அத்தகு நச்சுமரமும் வள்ளுவர்க்கு மட்டும் கைகொடுத்து உதவி உயர்வு பெற்றுவிட்டது.

"நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சுமரம் பழுத் தற்று" (குறள் 1008)

**பயன் மரம்**

மா, பலா, நெல்லி, போலும் இனிய கனிகள் தரும், மரங்கள், ஊர்நடுவே வளர்ந்து நிற்குமானால், அவை, அவ்வூரார் அனைவர்க்கும் பயன்படும். அத்தகு பயன்தரு மரங்களை, நாட்டவர் அனைவர்க்கும் உதவ வேண்டும் என்ற நல்லுள்ளம் வாய்ந்த நயனுடையான்கண் குவிந்து கிடக்கும் செல்வங்களுக்கு உவமை காட்டியதன் மூலம், அம் மரங்களின் பயனை வள்ளுவர் பெற்றுள்ளார்.

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான் கண்படின்" (குறள் 216)

**மருந்து மரம்:**

"அன்பு உடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்பது குறள் (72).

"தங்குறை தீர்வுஉள்ளார்; தளர்ந்து பிறர்க்குஉறாவும்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர் — திங்கள்(தன்)
கறையிருளை நீக்கக் கருதாது, உலகின்
நிறையிருளை நீக்கும் மேல்நின்று" என்பது நன்னெறி.

செல்வமானது, பெருந்தகையாளர்பால் சேர்ந்துவிடின், அது, உலகத்தவர் எல்லார்க்கும், எல்லாக் காலத்தும், எளிதில்பயன்பட்டுவிடும். இந்த உலக உண்மையை விளக்க, வள்ளுவர்க்கு உறுதுணையாக நின்றது; தன் வேர், அடிமரம்,

கிளை, இலை, பூ, காய், கனி ஆகிய அனைத்து உறுப்பாலும், மக்கள் நோயைப் போக்கவல்லதும், அணுக இயலா இடத்திலோ; பிறர்க்கு எளிதில் புலப்படா மறைவிடத்திலோ, ஒருபருவத்தே தளிர்த்து, ஒருபருவத்தே வற்றிப்போதலோ இல்லாமல், வேண்டுவார்க்கு வேண்டும் போதெல்லாம் கிடைக்கவல்லதுமாகிய மருந்து மரம்.

''மருந்தாகித் தப்பா மரத்து அற்றால் செல்வம்
பெருந்தகையான் கண்படின்'' (217) என்பது குறள்

**முள் மரம்:**

முள்மரந்தான்; ஆனால் இளைய மரம்; இதனால் நமக் கென்ன கேடுவந்துறப்போகுது? இதை ஏன் இப்போதே கிள்ளி எறியவேண்டும்? அதை அப்படியே விட்டுவிட்டால், அதுசில ஆண்டுகளில், நன்கு வளர்ந்துவிடும். அவ்வாறு வளர்ந்துவிட்ட நிலையில் அதை வேரோடு களைவதும் கடினம்; அதுமட்டும் அன்று; களையச்செல்லும் தன்னைத் தன்கூரிய முள்களால் குத்திக் குருதிபெருகச் செய்துவிடும். முள்மரத்தின் இயல்பு.

இவ்வியல்பை உணர்ந்த வள்ளுவர், அதைப்பயன் படுத்தற்காம் நல்ல இடத்தையும், நல்ல காலத்தையும் எதிர் நோக்கி இருந்தார். கிடைத்துவிட்டது அந்த வாய்ப்பு. பேரரசன் ஒருவன்; அவனுக்குப் பகைஉண்டு; ஆனால் அப்பகையோ, அத்துணைப் பெரிது அன்று. ஆகவே அதை அழிக்க வேண்டியது, அப்போதைய தேவை இல்லை என எண்ணி, வாளா இருந்து விட்டான். ஆண்டு சில கடந்தன அச்சிறுபகை, ஆற்றல்மிகு பெரும்படையாய் அவனையே அழித்து விட்டது.

ஒருவன் அழிந்துவிட்டான்; இனி உலகில் உள்ளவ ரெல்லாம், அவன் வழியைப் பின்பற்றக்கூடாதே; சிறு

பகையை வளரவிடக்கூடாதே என உலகத்தவர்க்கு உணர்த்த விரும்பிய வள்ளுவர்க்கு, உதவியது அம்முள்மரம்,

"இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து" இது அக்குறள் (879).

### வற்றல்மரம்:

நிலமோ, நீர்வளம் காணாதப் பாலைவனம்; அப்பாலையில், உள்ள பசுமரமே நாள்ஆக, நாள்ஆக வற்றிவிடும்; அங்ஙனமாகவும், அப்பாலையில் வற்றிப்போன ஒரு மரம் தளிர் விடல் இயலுமோ? இயலாது! பாலையில் அற்று விழப்போகும் அந்த வற்றல்மரத்தையும் வள்ளுவர் மறக்கவில்லை.

உயிர், உடலோடு கூடிவாழ்வதே, உலகில் உள்ளார் ஒவ்வொருவரிடத்தும் அன்பு காட்டுவதற்கே.

"அன்போடு இயைந்த வழக்குஎன்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு" (குறள்-72)

அத்தகைய அன்பு, ஒருவரிடத்தில் இல்லையாயின் அவர் வாழ்க்கை வளம்குன்றி, வற்றிவிடும்; அதாவது இல்லாகி விடும்: இந்த உண்மையை விளக்கவே வள்ளுவர்க்கு, வற்றல் மரம் கைகொடுத்து உதவியது.

"அன்பகத்துஇல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல்மரம் தளிர்த் தற்று" (குறள்-78)

## மலர்கள்

மரஇனத்தின் ஒருபகுதியே மலர் என்றாலும், வள்ளுவர் மலர்கள் சிலவற்றை எடுத்தோதி உள்ளமையால்' மரவினத்தை அடுத்து மலர்கள் கூறப்பட்டுள்ளன.

நீர்மலர்:

தாமரைபோலும் நீர் மலர்கள், எப்போதும் நீரின் மேலேயே இருக்கும் வண்ணம், அவற்றின் தண்டு, நீரின் மட்டம் உயரஉயரத் தானும் நீண்டுகொண்டே இருக்கும். நீர்மட்டம் எவ்வளவு உயருமோ, அந்த அளவு நீண்டுவிடும் தண்டு. நீர்மலர்த்தண்டின் இவ்வியல்பை, ஒருவன் உள்ளம், எப்போதும் உயர்வான ஒன்றையே உள்ளவேண்டும். அவன் உள்ள உணர்வு எவ்வளவு உயர்வான பொருளை உள்ளுகிறதோ, அந்த அளவு அவன் நிலையும் உயர்ந்து விடும் என்ற உண்மையை விளக்க ஆண்டுள்ளார்.

''வெள்ளத்து அனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத்து அனையது உயர்வு'' (குறள்-595)

நாறாமலர் :

கண்ணைக் கவரும் வண்ணமலர்கள் கொத்துக் கொத்தாக மலர்ந்திருப்பதை, இன்றைய பூஞ்சோலைகளில் காணுகின்றோம். ஆனால் அவற்றிற்கு மணம் சிறிதும் இல்லை. அதனால் அவை கண்ணுக்குத்தான் விருந்தளிக்குமேயல்லது மணத்தால் மகிழ்ச்சி அளிக்கா. அத்தகைய மலர்கள் வள்ளுவர் காலத்திலும் இருந்தன போலும். அத்தகு மலர்களை, உலகத்து உள்ள நூல்களை யெல்லாம் தேடிப்பெற்றுப் படித்திருந்தும், படித்து உணர்த்த பொருளை, நல்லோர்கூடிய அவையில், அவர் உணர்ந்து கொள்ளுமாறு கூறமாட்டாராயின், அவ்வாறு கூறமாட்டா அவர் கற்ற பெருங்கல்விக்கு உவமையாகப் பயன் கொண்டுள்ளார் வள்ளுவர்.

''இணர்ஊழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்து உரையாதார்'' (குறள்-650)

அனிச்சம்:

தொட்டால் சுணங்கி என்ற ஒரு சிறுசெடி உண்டு. வயல் வரப்புகளில் முளைத்துக்கிடக்கும் நரம்பின் இரு பக்கங்களிலும், சின்னஞ்சிறு இலைகள் வரிசையாக இருக்கும். அவற்றை நம் நுனிவிரலால் மெல்லத் தடவியவுடனே சுருண்டு விடும். அதுபோன்ற மலர் அனிச்சம். அது மிகமிக மென்மையானது. அதை ஒருவர் பறித்து அதன் மணத்தை நுகர மூக்கருகில் கொண்டுசென்ற அளவே குழைந்து வாடி விடும். அத்துணை மென்மையானது.

விருந்தினரைச் சேய்மைக்கண் கண்டவுடனே இன்முகம் காட்டி, அண்மையில் வந்தவழி இன்சொல் கூறி, வரவேற்று, இனியன பலஅளித்து ஓம்புதல் வேண்டும். ''சேய்மைக் கண் கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணிய வழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்ட வழி நன்றாற்றலும் என விருந்து ஓம்புவார்க்கு இன்றியமையா மூன்று'' என்பர். பரிமேலழகர்.

அதற்குமாறாக, அவர்களைச் சேய்மைக்கண்ட வழியே, கடுத்தமுகம் காட்டிவிடுவராயின், விருந்தினர் அதுகண்டே கலங்கிப் போய்விடுவர். இந்த உண்மையை விளக்கவந்த வள்ளுவர், அனிச்சமலரைச், செடியிலிருந்து பறித்து முகத்தருகே கொண்டுசென்று முகந்தவழி தான் வாடும்; ஆனால் விருந்தினர்களோ, சேய்மைக்கண் வரும்போதே கடுத்த முகம்கண்டு வாடிப்போவர் எனக்கூறி, அனிச்சத்தினும் மெல்லியர் விருந்தினர் என விருந்தினரின் மென்மையைக் கூற, அனிச்சமலரின் உதவியை நாடியுள்ளார் ஓரிடத்தில்,

''மோப்பக்குழையும் அனிச்சம், முகம் திரிந்து
நோக்கக் குழையும் விருந்து'' (குறள்:90)

தன் காதலியின், மென்மைத்தன்மையை எடுத்து இயம்புவான் ஓர் இளைஞன் வாய் வழியாக, "அனிச்சமே! நீ மிகவும் மென்மைத்தன்மை வாய்ந்தவைதான்; வாழ்க நீ; ஆனால் என் காதலி நின்னினும் மென்மையானவள்" எனக் கூறச்செய்து அனிச்சத்தின் மென்மையை விளக்கியுள்ளார்.

"நன்னீரை வாழி! அனிச்சமே! நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்" (குறள்:1111)

அதே இளைஞனை, "என் காதலி, அனிச்சம்பூவை அணிந்து கொண்டாள்; அதிலும் அவற்றின் காம்புகளைக் கிள்ளி எறிந்துவிட்டுத்தான் அணிந்து கொண்டாள்; என்ன சொல்வேன்! அதற்கே தாங்கமாட்டாது இவள்இடை முறிந்து போவாள்போலும்; இடை முறிந்துபோக மங்கல பறை ஒலியாபோலும்; அதாவது இறந்துபோக சாப்பறை ஒலிக்கும் போலும்" எனப் புலம்பச்செய்ததன் மூலம் அனிச்சத்தின் மென்மையை இரண்டாவது முறையாக உணர்த்தியுள்ளார்.

"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள், நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை" (குறள்:1115)

"மென்மைக்குப் பெயர்போன அனிச்சமலரும், அன்னப் பறவையின் தூவியும்கூட, மகளிர் அடிக்கு நெருஞ்சி முள்ளாகும்" எனக்கூறி அனிச்சத்தின் மென்மையை மேலும் விளக்கியுள்ளார் வள்ளுவர்.

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்" (குறள்:1120)

**குவளை:**

"அணிகள் பல அணிந்து அழகோவியமாய் நிற்கும் என் காதலியின் கண்களை ஒருமுறை கண்ணுற்று விடுமாயின்,

இவள் கண்களுக்கு நாம் நிகராகமாட்டோம் என உணர்ந்து" தோல்வியால், தலைதாழ்த்தி நிலம்நோக்கி நின்றுவிடும் எனக்கூறும் முகத்தான், குவளைபால் இரக்கம் காட்டியுள்ளார் வள்ளுவர்.

"காணில், குவளை, கவிழ்ந்து நிலம்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று" (குறள்-1114)

நீர்ப்பூவைக் காட்டிய வள்ளுவர், கொம்புகளில் மலரும் மலரையும்காட்டியுளளார் ஓரிடத்தில் கோட்டுப்பூ(குறள்-1313)

## மலர்களின் இயல்பு:

இவ்வாறுதனிமலர்களின் இயல்புகளை எடுத்துக்காட்டிய வள்ளுவர், அம்மலர்களின் பொது இயல்புகள் சிலவற்றையும் விளக்கியுள்ளார். மலர், மலராகவே திடுமென மலர்ந்து விடுவதில்லை; அரும்பாகி, பின்னர்ப் பேரரும்பாகிப் பின்னரே மலரும். இந்த இயல்பையும் உணர்த்தியுள்ளார்,

"காலை அரும்பி பகலெல்லாம் போதாகி
மாலை மலரும் இந்நோய் (குறள்-1227)

அதேபோல், மலர்மலர்ந்த பின்னர்தான், அம்மலருக்கு மணம் உண்டு என்பதில்லை. மலரும் பருவத்துப்பேரரும்பாக இருக்கும்போதே மணம் அவ்வரும்பினுள் புகுந்துகிடக்கும் என்பதையும் அறிந்து அறிவித்துள்ளார். "முகைமொக்குள் உள்ளது நாற்றம்" (குறள்:1274). இந்த உண்மையை உணர்த்துமிடம் அருமையானது.

"பெண் சிரித்தால் போச்சு" என்பது நாட்டுமொழி; ஒரு இளம்பெண், ஓர் இளைஞனைப் பார்த்து சிறிதே புன்முறுவல் காட்டுவளாயின், அப்புன்முறுவலில், அவள், அவன்பால் காதல் கொண்டுவிட்டாள் என்ற அறிய உண்மை அடங்கியிருக்கும்

என்பதை உணர்த்த ஆண்டிருக்கும் அருமை பாராட்டற்கு உரியது. ''பேதை நகைமொக்குள் உள்ளது ஒன்று உண்டு'' (குறள் 1274)

## பறப்பன:

### அன்னம்:

திருவள்ளுவர், அன்னத்தின் இறகு மென்மையானது தான், ஆனால், அதுவும் மகளிர் காலடியின் மென்மைக்கு ஈடாகாது என கூறியதை முன்னரே கண்டோம் (குறள் 1120)

### காக்கையும் கூகையும்:

காக்கையின் துணையை இரண்டு இடங்களில் நாடியுள்ளார் வள்ளுவர். அவனோ சிற்றரசன்; அவனிடம் இருப்பதோ சிறுபடை; அவன் பகைவனோ பேரரசன்; அவனிடம் இருப்பதோ பெரும்படை; நிலைமை இதுவாகவும், அப்பேரரசனை வெல்லக் கருதினான் அச்சிற்றரசன். அதற்கு வழியாது என அறியத் தன்னிடம்வந்த அச்சிற்றரசனுக்கு, ''உனக்கு வாய்ப்புடைய காலமாக, அவனுக்கு வாய்ப்பு இல்லாக் காலமாகப் பார்த்துப் போர்தொடுத்துவிடு; வெற்றி உறுதி'' என அறிவுரை கூறியவழி ஒருமுறை காக்கையின் துணையை நாடினார்.

''அரசே! கூகை, அதாவது கோட்டான், காக்கையை விட வல்லமை வாய்ந்ததுதான்; ஆனால், அதற்கு இரவில்தான் கண்தெரியுமே அல்லாது பகலில் கண்தெரியாது. அதனால் காக்கை, பகலில் அதன் இடம் தேடிச்சென்று குத்திக் கொன்றுவிடும்'' எனக்கூறி அவனுக்கு ஊக்கம்ஊட்டி அளித்தஇடம் ஒன்று.

"பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது" (குறள்: 481)

காக்கையின் துணையை இரண்டாவது முறையாக நாடியிருப்பது, ஒருவனுக்கு ஆக்கமும் புகழும் எப்பொழுது உண்டாகும் என்ற வினாவிற்கு விடையளிக்கும் இடத்தில்.

தன்பால் உள்ளது சிறிதே யாயினும், அதைத்தன் சுற்றத்தாரோடு கூடியிருந்து உண்பவனுக்கே ஆக்கமும் புகழும் சேரும் என அறிவுரை கூறும்பொழுது, "அதோ காண்! கிடைத்த இரை சிறிதேதான்! அதைக் கண்ணுற்றதும் ஒரு காக்கைதான்! ஆனால், அது,அந்த இரையைத்தானே தின்றுவிடக் கருதாது, தன் இனத்தையெல்லாம் கரைந்து அழைத்து ஒன்றுகூடி அமர்ந்து உண்ணுவதை" என அக்காட்சி நலத்தைக்காட்டி, அக்காட்சி நலத்திலும் காக்கையின் கரை ஒலியிலும் கரைந்து உருகிப்போய் விட்டார் வள்ளுவர்.

"காக்கைகரவா கரைந்து உண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கே உள" (குறள்: 527)

## கொக்கு:

"ஓடுமீன் ஓட உறுமீன்வரும் அளவும் வாடி இருக்குமாம் கொக்கு" கொக்கின் இயல்புகளில் ஒன்று இது; அதன் வேறோர் இயல்பை, ஏற்ற இடத்திற்குப் பயன்படுத்தி யுள்ளார் வள்ளுவர். வினை செய்வார்க்குக் காலத்தின் துணை தனிமிக இன்றியமையாதது; எடுத்த வினையை எடுத்து முடிப்பதற்கு ஏற்புடைய காலம் வரும்வரை அப்படியொரு முயற்சி தமக்கு இருப்பதாகவே வெளிக்காட்டாமல் அடங்கி யிருத்தல் வேண்டும். ஏற்புடைய காலம் வந்துற்றதும், விரைந்து செயலாற்றி அவ்வினையை முடித்துக் கொள்ளுதல் வேண்டும், ஒருவினையினை செய்வார் காலம் அறிய

வேண்டியதன் இன்றியமையாமையினை விளக்க வள்ளுவர்க்குக் கொக்கின் துணைவேண்டியதாயிற்று. நீர் நிலைகளின் கரைகளில் கொக்கு அமர்ந்திருக்கும், அதற்கு அணித்தாக, அது விரும்பும் மீன் வரும்வரை ஆடாமல் அசையாமல் உறங்குவதுபோல் நின்றுகொண்டே இருக்கும், ஆனால், அது எதிர்பார்த்திருந்த மீன், அதன் அருகே வரக் கண்ட அளவே, அதை விரைந்து குத்தி எடுத்துக்கொண்டு விரைந்து பறந்தோடிவிடும். வினையாற்றுவானுக்கு ஏற்ற உவமையை எடுத்துக்காட்டிய வள்ளுவர் திறம்வியந்து பாராட்டற்குரியது.

''கொக்கு ஒக்ககூம்பும் பருவத்து; மற்றுஅதன்
குத்துஒக்க சீர்த்த இடத்து'' (குறள்-490)

**புள்:**

புள் என்பது பறவையினம், அதிலும் கூடுகட்டி வாழும் பறவை இனத்தைக்குறிக்கும் பொதுவானசொல். அத்தகு புள்இனத்தை இரண்டு இடங்களில் அறிமுகம் செய்துள்ளார் வள்ளுவர். தலைமுடியை நீட்டலும்; மழித்தலும், நீர் பலகால் மூழ்கலும், காவியுடுத்தலும், கமண்டலமும், தண்டமும் ஏந்தலும் ஆகிய தவவேடம்பூண்டு, தவசிபோல் காட்சி அளிக்கும் அதேநிலையில், தவநெறிக்கு புறம்பான நெறியில் நடைபோடும் ஒருவன்செயல். வேட்டுவன் ஒருவன், பறவைகள்பால் இரக்க உணர்வு உடையான்போல் அவை விரும்பி உண்ணும் உணவைப் பரவலாக வீசிவைத்துவிட்டு, அதை உண்ணவரும் அவற்றை அகப்படுத்தும் கருத்தோடு, அடர்ந்த புதருக்குள்மறைந்திருந்து புட்களின் வருகையை எதிர்நோக்கி இருப்பதுபோலாம் எனக்கூறி. அப்பறவை களுக்கு இரக்க உணர்வு காட்டியுள்ளார் ஓரிடத்தில்.

''தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தன்று'' (274)

உடலுக்கும் உயிர்க்கும் உள்ள உறவு யாது என கேட்போர்க்கு, விடையாக, பறவை கூட்டிற்கும் அக் கூட்டினுள் வாழும் பறவைக்கும் உண்ண உறவு எத்தகையதோ, அத்தகையதுதான்; உயிர் பிரிந்துவிட்டால், உடலால் பயன் இல்லை. பறவை பறந்து விட்டால் அக் கூட்டால் பயன் இல்லை; எனக்கூறி, நிலையாமையை நன்கு உணர்த்த, நல்லதொரு துணையாகக்கொண்டுள்ளார், புள்ளை பிரிதோரிடத்தில் வள்ளுவர்,

''குடம்பை தனித்து ஒழியப் புள்பறந்தற்றே;
உடம்போடு உயிரிடை நட்பு'' (338)

**மயில்:**

இளையாள் ஒருத்தியைக் காதலித்து, அவளைப் பார்த்த அளவிலே, ''இவள், கண்டாரை விடுத்து கடவுட் கன்னிகை யாம் அணங்கோ, அல்லது, கண்டார்க்குக் களிப்பூட்டும் அழகிய மயிலோ?'' என வியந்து நிற்கும் நிலையில் மயிலை அறிமுகம் செய்துள்ளார் வள்ளுவர், ''அணங்கு கொல், ஆய் மயில் கொல்?'' (1081)

<u>ஊர்வன:</u>

**ஆமை:**

''அடக்கம் அமரருள் உய்க்கும்'' என அடக்கத்தின் பெருமை பாடவந்த வள்ளுவர், அடக்கமாவது யாது அதனாலாம் பயன் யாது என்ற வினாவிற்கு விடையளிக்கும் நிலையில், தனக்கு ஏதேனும் கேடுவரும் என உணர்ந்த அளவே, தன்தலை, நான்கு கால்கள் ஆகியவற்றைத் தன் முதுகாம் ஓட்டுக்குள் அடக்கிக்கொண்டு தன்னைக்காத்துக் கொள்ளும் ஆமைபோல் தன் ஐம்பொறி வாயிலாக எழும் ஐந்து ஆசைகளையும், தன்மனத்தையாம் பெட்டகத்துள்ளே அடக்கிக் கொண்டால், அவ்வடக்கம், அவனுக்கு இம்மையில் மட்டும் அன்று, அவன் எடுக்க இருக்கும் எழுபிறவியிலும்

நல்லதொரு பாதுகாப்பாகும் என விடையளித்து, அடக்கத்திற்கு அழகியதோர் எடுத்துக்காட்டாக ஆமையைக் காட்டியுள்ளார்.

> ''ஒருமையுள் ஆமைபோல் ஐந்துஅடங்கல் ஆற்றின்;
> எழுமையும் ஏமாப்பு உடைத்து'' (126)

எலி:

எலியையும் மறக்கவில்லை வள்ளுவர். அதேநிலையில் அவற்றை மதிக்கவும் இல்லை; படை எண்ணிக்கையில் பெரியதுதான்; ஆனால் ஆற்றல் அற்றது ஆயின் படையின் எண்ணிக்கைப் பெருக்கம் பயன்தராது ஆற்றல்மிகு வீரன் ஒருவன். அப்படைமுன் தோன்றுவனாயின், அப்படை அறவே அழிந்துவிடும். படையின் இம்மாட்சியை விளக்க வந்த வள்ளுவர், எலிக்கூட்டம் கடல்போல் திரண்டுவந்து பெருங்கூச்சல் எழுப்பிக்கிடந்தாலும், ஒரு நாகப்பாம்பு, அவற்றின் அருகே செல்லக்கூடத் தேவையில்லை; தொலைவில் இருந்தவாறே பெருமூச்சு விடுமாயின்; எலிக் கூட்டம் எனக்கூறியுள்ளார்.

> ''ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை?
> நாகம் உயிர்ப்பக் கெடும்'' (163)

என்பிலது:

நத்தை, மரவட்டை போல்வன என்பிலது என்ற உயிரனத்தைச் சேர்ந்தவை. ''அன்பின் வழியது உயிர் நிலை'' அறக்கடவுள் எவ்வுயிர்மாட்டும் விருப்பு வெறுப்பு அற்றவன்; உடலை இடமாகக்கொண்ட உயிர். அன்பை மறந்துவிடுமாயின்; மறந்துவிடும் தன் செயலாலேயே அறக் கடவுளின் சினத்திற்கு ஆளாகித்தானே அழிந்துபோகும். அன்பின் சிறப்பையும், அதை மறக்கும்உயிர் அறக்கடவுள்

சினத்திற்குத்தானே ஆளாகித்தன் அழிவிற்குத்தானே காரண மாகும் இப்பேருண்மையை விளக்க, வள்ளுவர்க்குத் துணை வந்துளது என்பிலா ஓர் உயிர். ஞாயிறு விருப்பு வெறுப்பு அற்றவன். எந்த உயிரையும் தேடிச்சென்று, தன் வெப்பத் தால் கொடுமை செய்பவன் அல்லன்; ஆனால் எலும்பில்லா உயிர்கள் தாமாகவே ஊர்ந்து சென்று, ஞாயிற்றின் வெயிலின் முன் கிடந்துவிடுமாயின்; அஞ்ஞாயிற்றின் வெயிலால் சுருண்டு உயிரிழந்துபோகும். இந்த உண்மையை எடுத்துக்கூறி, தன்மை மறந்த உயிர்படும் அவலநிலையை விளக்கியுள்ளார் வள்ளுவர்.

> "என்பு இலதனை வெயில் போலக்காயுமே,
> அன்பு இலதனை அறம்" (77)

**பாம்பு:**

பாம்பு என்றால் படையும் நடுங்கும் என்ப: அந்தப் பாம்பையும், தம் பொருள் விளக்கத்திற்குப் பயன் கொண்டு உள்ளார்; ஓரிடத்தில் அன்று இரண்டு இடத்தில் ஒன்று எலிப்பகையைப் பற்றிக் கூறிய இடத்தில். (763) ஆகவே. அதை மீண்டும் கூறத்தேவை இல்லை. இரண்டாவது இடம், உள்ளத்தால் இரண்டுபட்டு, ஆனால் புறத்தே ஒருவர்போல், நடிக்கும் உட்பகையுடையார் இயல்பினை விளக்கும் இடம். அத்தகையார் வாழ்க்கை ஒரே சிறு குடிசையுள் ஒருவர், பாம்போடு கூடிவாழ நேர்ந்தால் எத்தகையதாமோ, அத்தகையதாம்! எந்நேரத்தில் பாம்பு பாய்ந்து விடுமோ என்ற அச்சம் வாழ்பவனுக்கு. எந்த நேரத்தில்தான் அடிக்கப் பட்டுவிடுவோமா. என்ற அச்சம் பாம்புக்கு அதனால் இருவர்க்குமே எந்நேரமும் அச்சமே தலைதூக்கி நிற்கும் எனக்கூறுவதன் மூலம் உட்பகையுடையார்களின் அச்சமரு, வாழ்க்கையை எடுத்துக்காட்டியுள்ளார்.

''உடம்பாடு இல்லாதவர் வாழ்க்கை, குடங்கருள்
பாம்போடு உடன்உறைந் தற்று''   (890)

முதலை:

ஓர் உண்மையைக் கூறி, அதன் மூலம் பிறிதோர் உண்மையை விளக்கும் வித்தகர் வள்ளுவர். ஒருவர் தமக்குரிய இடத்திலேயே இருப்பாராயின், அவ்விடத்தில், தம்மினும் வல்லவரையும் வெற்றி கொண்டு விடுவர். அதற்கு மாறாக அவர், தம்மிடம்விட்டு வெளிவந்து விடுவராயின். ஆங்கு அவரை அவரினும் ஆற்றல் குறைந்தவனே அழித்து விடுவர். இந்த உண்மையை விளக்க விரும்பினர் வள்ளுவர் அதற்கு அவர்க்குத், துணைவந்தது முதலை.

ஆழமான நீர்நிலைகளே முதலையின் வாழிடம். அது அங்கு வாழும்போது, ஆங்குவரும் எவ்வளவு வல்லமை வாய்ந்த உயிர்களையும், வாயால் கௌவி ஈர்த்துக்கொன்று தின்றுவிடும். முதலை வாய்ச்சிக்கிய யானையைக் காக்க திருமாலும், சிறுவனைக்காகச் சிவனும் ஓடிவர வேண்டி நேர்ந்த புராணக்கதைகள் ஈண்டு நினைவுகோட ற்குரித்து. ஆனால் முதலை, நீர்நிலை விடுத்து நிலத்திற்கு வந்து விடுமாயின், காக்கை, கழுகுபோலும் பறவைஇனமே அதைக் குத்திக் கொன்றுதின்றுவிடும். முன்னர்க்கூறிய பேருண்மையை விளக்க, இந்தக் கண்கூடு நிகழ்ச்சியைக் காட்டியுள்ளார் வள்ளுவர்.

''நெடும்புனலுள் வெல்லும் முதலை, அரும்புனலின்
நீங்கின் அதனைப் பிற''   (495)

நடப்பன:

களிறு:

சொற்சுருக்கத்தில் கருத்துடைய வள்ளுர்க்குக் களிற்றின் இயல்பை விளக்கமட்டும் எட்டு குறள்கள் தேவைப்பட்டுள்ளன.

1) அவரவர் அவரவர்க்குரிய இடங்களில் இருப்பின் வலிமிகும், தம்மிடம்விட்டு வெளிப்போந்து விடுவாராயின் வலிகுறையும் என்ற உண்மையை விளக்க, வள்ளுவர்க்கு முதலையின் துணை ஒன்றுமட்டும் போதவில்லைபோலும்! யானையின் துணையையும், ஏன், நரியின் துணையையும் நாடியுள்ளார்.

போர்க்களமாயின், எதிர்த்துவரும் வேல்வீரர்களைத் தொங்கும் கையால் தாக்கிக் கோட்டில் குத்திக் கோத்துக் கொண்டு களமெல்லாம் வெற்றி உலாவரவல்லது களிறு. அதே களிறு, கால்வைத்தவுடனே தன்னகத்தே ஈர்த்துக் கொள்ளும் இயல்புடைய களர் நிலத்தில் அடியிட்டுவிட்டால், அக்களரு, அக்களிற்றை தன்னகத்தே ஆழ்த்திக்கொள்ள, அந்நிலை காணும் நரி, அதிலும், காட்டில் களிற்றைக் கண்டதும் காணாதூரம் ஓடிஒளியும் குள்ளநரி, சிறுகச்சிறுகக் கடித்துக் கடித்துக் கொன்று தின்றுவிடும் என்ற உலகியல் நிகழ்ச்சியை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார்.

''காலாழ் களரில் நரிஅடும்; கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு'' (500)

2) ஊக்கம் உடையவர். தாம்முடிக்க முன்னிய முயற்சிக்கு முட்டுக்கட்டை நேர்ந்தபோதும், சோர்ந்துவிடாது. எண்ணியதை எண்ணியாங்கு எய்தவே முயற்சிப்பர் இந்த உண்மையை விளக்கவும். களிற்றின் உதவியை நாடியுள்ளார் வள்ளுவர். களத்தில் நிற்கிறது. யானை அதை வளைந்து நிற்கும்வீரர்கள் ஏவிய, வேலும் அம்பும், அதன் உடல்முழுதும்

பாய்ந்து ஊடுருவிக்கிடக்கின்றன. ஆனால் அந்நிலையிலும், சிறிதும் நிலைகுலையாது நிற்கும் களிற்றைக் காட்டியுள்ளார். வள்ளுவர்.

> ''சிதைவிடத்து ஒல்கார் உரவோர்; புதையம்பிற்
> பட்டுப்பா டூன்றும் களிறு'' (597)

3) உடல்வலியும், படைவலியும் உடையனாயினும் அவற்றை உடைய அரசன்பால் ஊக்கம் என்ற ஒன்று இல்லாயின் அவன் எதற்கும் அஞ்ச வேண்டி நேரிடும். இந்த உண்மை விளக்கவும், வள்ளுவர்க்குக் களிறு தேவைப்பட்டது; ஆனால், அப்பேறுண்டும் அஞ்சா. முன்னைய களிறு அன்று! ஊக்கம் இல்லா ஒரு களிறு; களிறு பருத்த உடல் வாய்க்கப் பெற்றதுதான்: அத்துடன் கூரிய இருகொம்புகளையும் உடையதுதான்; ஆனால் ஊக்கம் இல்லாதது; அதனால் தன்னினும் உருவத்தில் சிறிய தன்னைப்போலக் கொம்பு எதுவும் பெறாத! ஆனால் ஊக்கம், மிக்க புலியைக் கண்ட அளவே அஞ்சி ஓடிவிடும், ஊக்கம் உடைமையின் சிறப்பை விளக்க, ஊக்கம் குன்றிய களிறு தேவைப்பட்டது வள்ளுவர்க்கு.

> ''பரியது கூர்ங்கோட்டது, ஆயினும் யானை
> வெருஉம் புலிதாக் குறின்''. (599)

4) பழகிய யானையக்கொண்டு பழகாத. காட்டில் திரியும் புதிய யானைகளைப் பிடிக்கும் தொழில் கற்றவர். வள்ளுவர்! அதனால் ஒரு செயலைச் செய்துகொண்டு, இருக்கும்போதே. அச்செயல் துணையால், வேறு ஒரு செயலையும் முடித்துக் கொள்ளும் வித்தகத்திற்கு யானைபிடி தொழில் உவமைகாட்டியுள்ளார்.

''வினையால் வினையாக்கிக் கோடல்; நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.'' (678)

5) யானைப் போர்கண்டு பழகியவர் போலும் வள்ளுவர்: கூடிவாழும் இயல்புடையவேனும். யானைகள் சிலசமயம் தமக்குள்ளே கடும்போர் இட்டுக் கொள்வதும் உண்டு யானைப்போர் காட்சிக்கு இனிது. ஆனால் அப்போர் இயல்பாக நடைபெறும். சமவெளியில் அப்போர் நிகழ் இடத்திற்கு அணித்தாக. நின்று காணல் கூடாது. போரிட்டுக் கொண்டிருக்கும் யானைகள், தம் பகை மறந்து போரைக்கண்டு களித்திருப்பார்மீது பாய்ந்துவிடும் அதனால் யானைப்போரை, அது நிகழும் இடத்திற்கு அணித்தாக உள்ள குன்றின்மீது நின்று காணவேண்டும், காரணம், யானை குன்றிலிருந்து இறங்கும்போது விரைந்து இறங்கி விடும். ஆனால் குன்றின்மீது ஏறஅது பெரிதும் இடர்ப்படும், ஆகவே குன்றின்மீது இருந்து யானைப்போர் காண்பார்க்கு இடையூறும் நேராது. போரையும் இனிதே கண்டு களிக்கலாம். காட்டில் காணலாம், இக்கவின்மிகு காட்சியை. கையில் வேண்டும் பொருளை வைத்துக்கொண்டு, காரியம் பண்ணத்தொடங்குவான். அதை, இனிதே, இடையூறின்றி முடிப்பன் என்ற உலகியல் உண்மையை விளக்கத்துணை கொண்டுள்ளார்.

''குன்றேறி யானைப்போர் கண்டற்றால்;
தன்கைத்துதொன்று
உண்டாகச் செய்வான் வினை'' (758)

6) நல்லவீரன் பகைவன் இயல்பு அறியாது, போர் தொடுக்கமாட்டேன்; தொடுத்தல் அவனுக்குப் பெருமை சேர்க்காது; தன்னினும் மெலிந்தான்மீது போர்தொடுத்து,

அவனை வெற்றிகொண்டு, தலைநிமிர்ந்து. உலாவருவதைக் காட்டிலும், தன்னினும் வல்லான்மீது போர்த்தொடுத்து, அவன்பால் தோல்வியுற்று, தலைதாழ்த்தி திரும்புவதே சுத்த வீரனுக்கு அழகு, இதை விளக்க வள்ளுவர்க்கு வேட்டைக்காரர் இருவர் தேவைப்பட்டனர்; ஒருவன் காடு சென்று, வேட்டை ஆடிய முயலையும்; அதைக் கொன்ற அம்பையும் கையில் எடுத்துக்கொண்டு ஊர் திரும்புகின்றான். ஒருவன் காடு சென்று, கண்ணெதிர்ப்பட்ட களிறு ஒன்றின்மீது தன்வேலை எறிய; யானை பிழைத்துக்கொண்டு ஓடிவிட யானையை ஓடவிட்ட அவ்வேலைக் கையில் தாங்கி வருகிறான். ஊர் எல்லையில், இருவரையும் கண்ட வள்ளுவர். யானைப்போகவிட்ட வேல் ஏந்தி வருவான் கழுத்தில் மாலையிட்டு வரவேற்கிறார் வள்ளுவர்; இதோ அவர் கூறுவது கேட்க!

''கான முயலெய்த அம்பினில்; யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது'' (772)

7) போர்க்களத்தில் ஓர் இனியகாட்சி; வீரன் ஒருவன் வேலேந்தி நிற்கின்றான்'' அவன்மீது பாய வருகிறது ஒரு களிறு வீரன் தன்கை வேலை, அதன்மீது வீசினான் வேலேறுண்ட அவ்வேழம் இறந்து வீழ்ந்து விட்டது. அக் காட்சி நலம்கண்டு களித்திருக்கும் நிலையில் வேறோர்வேழம் அவன்மீது பாயத் தொடங்கிவிட்டது, கலக்கம் அதிகமாகி விட்டது வீரனுக்கு, வேழத்தால் வீழ்த்தப்பட்டுப் போவேனே என்று அன்று; பாய்ந்துவரும் வேழத்தின்மீது வீச வேலொன்று இல்லையே என்று; அந்நிலையில் எங்கிருந்து வந்த வேல் ஒன்று அவன் மார்பில் பாய்ந்தது; மகிழ்ச்சிக் கடலின்

எல்லைக்கே சென்றுவிட்டான் வீரன்; பாய்ந்த வேலைப் பறித்து எடுத்துப் பாய்ந்துவரும் வேழத்தின்மீது வீசி, அதை வீழ்த்தினான். இவ்வின்பக் காட்சிதான்; ஆனால் இரண்டு வேழங்களையும் பறிகொடுத்துவிட்டார் வள்ளுவர்.

> "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்,
> மெய்வேல் பறியா நகும்" (774)

8) மதம்கொண்ட யானை கண்ட இடம் எல்லாம் ஓடித் தொல்லை கொடுத்துவிடாது தடுக்க, முகபடாம் போட்டு கண் மறைக்கப் பெற்ற களிறு, வள்ளுவர் காட்டும் எட்டாவது களிறு. "கடாசுக் களிற்றின்மேல் முகபடாம்" (1087)

**கவரி:**

"மானம் இழந்தபின் வாழாமை முன்னினிதே" என்பது உலகியல் அறம்; அவ்வறநெறி உணர்ந்த ஆன்றோர், மானம் இழந்தபின் உயிர் வாழார் என்ற உண்மையை விளக்க, தன் உடலிலிருந்து ஒருமயிர் நீங்கினாலும் உயிர்வாழாத கவரிமானை உவமைகாட்டியுள்ளார் வள்ளுவர்.

> "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்,
> உயிர்நீப்பர் மானம் வரின்" (969)

**தகர்:**

ஊக்கம் உடையவன்தான்: ஆயினும் தான்எடுத்த முயற்சி இனிதே முடிதற்கு ஏற்றகாலம் வரும்வரை அடங்கி இருப்பான்; அவ்வடக்கத்தை அவன் தோல்வியாகக் கருதிவிடக்கூடாது; இந்த உண்மையை விளக்க தன் எதிர் நிற்கும் ஆட்டின்மிது பாய எண்ணிவிட்ட ஆடுஒன்று, அதன்மிது விரைந்து பாயும் வேகத்தினைப் பெறுவான் வேண்டா. சில அடிகள் பின்வாங்குவதைக் காட்டியிருக்கும்

நயம் நயத்திற்கு உயரிது ஓரிடத்தில் யானைப் போரைக் காட்டினார்; ஈங்கு ஆட்டுக்கிடாய்ப் போரைக்காட்டி யுள்ளார்.

''ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து'' (486)

பகடு:

கடல்நீரால் விளைந்த உப்பை ஏற்றிக்கொண்டு மலைநாடு நோக்கிச் செல்லும் ஆரக்கால் பொருத்திய வண்டி பள்ளத்தில் ஆழ்ந்தபோது, அவ்வாறு ஆழ்ந்துபோதலைப் போக்கி ஈர்த்துச் செல்லும் பாரம்தாங்கும் பகடு ''கழிஉப்பு முகந்து நல்நாடுமருக்கும் ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும் உடன் உடை நோன்பகடு'' (புறம்:60)பாரம் மிகுதியால் வண்டிச் சக்கரம் ஆழ்ந்தபோக. மணல் பறக்கவும் கல் பிளக்கவும். அவ்வண்டியை ஈர்த்துச் செல்லும் பகடு. ''பண்டச் சாகாட்டு ஆழ்ச்சிச் சொல்லி, வரிமணல் மரக் கல்பக நடக்கும் பெருமிகப் பகடு'' (புறம்:90) என்றெல்லாம் புகழப்படும் பகடு வள்ளுவர் பார்வையில் மட்டும் படாது விரைந்து விடுமோ? வண்டியை ஈர்த்துச் செல்லுங்கால், இடைவழியில் நேரும் இடையூறுகளையெல்லாம் பொருட்படுத்தாது. குறித்த இடம் சென்று சேரும் பகட்டினை ஒப்பானுக்கு, வந்துசேரும் இடுக்கண்கள் எல்லாம் தாம்தான் இடுக்கண் உற்றுப்போகுமேதல்லது, அவனுக்கு ஏதும் இடுக்கண் உறாது என கூறுமுகத்தான் அப்பகட்டி னுக்குப் பாராட்டு தெரிவித்துள்ளார் வள்ளுவர்.

''மருத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து'' (624)

## பிணை:

மகளிர் கண்கள், மானின் கண்களுக்கு நிகராம், எனக் கூறுமுகத்தான் பிணையினை; அதாவது பெண்மானை, நம்மிடம் அனுப்பியுள்ளார் வள்ளுவர், "கண்ணோ, பிணையோ மடவரல் நோக்கம்", "பிணையேர் மடநோக்கு" (1085, 1089).

## நரியும், முயலும்:

களர்நிலத்தில் கால் இட்டுவிட்ட களிற்றைக் கொன்று தின்னும் நரியையும் (588) வல்லவன் அல்லான் ஒருவனால் கொல்லப்பட்ட முயலையும் (772) முன்பே கண்டோம்.

# 4. வள்ளுவர் வகுத்த மருத்துவம்

உயிருக்கும் உடலுக்கும் உள்ள உறவு, பறவைக்கும், அதுகட்டி வாழ்ந்திருந்த கூட்டிற்கும் உள்ள உறவு போன்றதே. என்றேனும் ஒரு நாள், அப்பறவை தான் வாழ்ந்திருந்த கூட்டைத், தனித்துப் பயனற்றுப்போக விட்டு விட்டுப் பறந்து போய்விடுதல்போல், உயிர் என்றேனும் ஒரு நாள், தான் அதுசாரும் இடம் கொண்டிருந்த உடலைத், தனித்துப் பயனற்று அழிந்துபோக விட்டுவிட்டு போய்விடும்.

"குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்பொடு உயிரிடை நட்பு" (338)

ஆகவே, நேற்று நன்கு வாழ்ந்திருந்த ஒருவன் இன்று இல்லை என்ற பெருமைக்கு உரியது இவ்வுலகம்.

"நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு" (336)

என்றெல்லாம் கூறி நிலையாமையின் கொடுமையை எடுத்துக் கூறியவர்தாம் திருவள்ளுவர். எனினும், இறும் உயிர்க்கும் ஆயுள் மருந்து ஒழுக்கல் தீது அன்றால்; அல்லன போல் ஆவனவும் சில" என்பதையும் அளித்தவர் அவர். ஆகவே, அழிந்துபோகும் அவ்வுடலையும், மேலும் சில காலம் அழிந்துபோகவிடாது காக்கவல்ல வழிமுறைகளையும் வகுத்துத் தந்துள்ளார்.

நோய்க்காம் காரணங்களைக் கண்டறிந்தால் அல்லது நோய்தீர்க்கும் மருந்து அம்மருந்தினை அளிக்கும்முறை போல்வனவற்றை அறிதல் இயலாது ஆகவே, நோய்க் காரணங்களுள் தலையாய சிலவற்றை முதற்கண் கூறி யுள்ளார் வள்ளுவர்.

உடல் அழியாதிருக்க உறுதுணை புரிவன, அவ்வுடலுள் அடங்கி இருக்கும் காற்று, பித்தநீர், கபம் எனப்படும் சளி என்ற இம்மூன்றும். இவை இருக்கவேண்டுவதுதான் ஆனால் அவையும் அளவோடு இருக்கவேண்டும். ஏதேனும் ஒன்று இருக்கவேண்டிய அளவுக்கு மிகுதியாகவோ, குறைவாகவோ இருந்துவிட்டால், நோய்கள் வந்து குடிகொண்டுவிடும், ஆகவே, அந்த மூன்றும் அளவோடு இருக்கப் பார்த்துக்கொள்ள வேண்டும்.

''மிகினும் குறையினும் நோய்செய்யும்; நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று'' (941)

வளிமுதலா எண்ணிய அம்முன்றையும் அளவோடு வைத்திருப்பது எவ்வாறு? எதனால் அவை அளவில் மாறுபடுகின்றன: இந்தக் காரணத்தையும் கண்டறிந்து அறிவித்துள்ளார். தன் உடல்நலத்தோடு இருக்க எவ்வளவு குறைந்த உணவை உட்கொள்ள வேண்டும்என்பதை அறிந்து அந்த அளவு உணவையே உண்பவன் நோய் இன்றி இன்புற்று வாழ்வான், ஆனால் உடல்நலத்துக்கு ஏற்ற அளவு அறியாது. நனிமிகப் பெரிய அளவிலான உணவுப் பொருட்களை உண்ணுவனாயின் அவன் உடல் உள்ள நோய் களுக்கெல்லாம் உறைவிடமாய் அமைந்து அவனுக்கு. நீக்கலகாச் கொடுந்துன்பத்லிதத்தரும். ஆகவே. நோய்க்கு மூலகாரணம் பெருந்தீனி.

''இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய்'' (946)

உண்டஉணவு செரிக்கவேண்டும்; உணவைச் செரிக்க வைப்பது. உடலில் இயல்பாகவேஉள்ள வெப்பம், அவ்வெப்பம், உண்ணப்படும் உணவைச் செரிப்பதற்குஏற்ப மிகுவதோ குறைவதோ செய்யாது என்றும் ஒரே அளவினது அது. ஆகவே, அதன்அளவு அறிந்து, அதற்கேற்றஅளவு உணவையே உண்ணவேண்டும். அதுஅறியாது, அவ்வெப்பத்தின் செரிக்கும் ஆற்றலுக்கு மேற்பட்ட உணவுகளை உண்பவனாயின், அந்த உண்வே ஊரிலுள்ள நோய்களைஎல்லாம் அவன் உடலுள் புகுத்திவிடும். ஆகவே நீஅளவு அறிந்து உண்ணாமை நோய்க்குக்காரணம்.

"தீயளஅன்றித் தெரியான்பெரிது உண்ணின்,
நோய் அளவின்றிப் படும்" (947)

வந்தபின் காப்பவனினும், வரும்முன் காப்பவனே அறிவாளி. நோய் இன்னின்ன காரணங்களால் வரக்கூடும் என்பதை அறிந்து, அதுவாராமைக்குஉரிய வழிமுறைகளை முன்கூட்டியே மேற்கொண்டுவிடுவனாயின், பின்னர் அவன் நடுங்க வரக்கூடியநோய் வாராமலே போய்விடும்.

"எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை;
அதிர வருவதோர் நோய்" (429)

ஆக வரும்முன்காப்பதில் விழிப்பாய் இருக்கவேண்டும்.

காலை, நண்பகல், இரவு என மூன்றுமுறை உணவு உட்கொள்வது உலகவழக்கு என்றாலும், ஒருவேளை உண்ட உணவு நன்கு செரித்துவிட்டது என்பதை அறிந்துகொண்ட பின்னரே, மறுவேளை உணவு உட்கொள்ள வேண்டும். உண்ணும் உணவும், அந்த இடைவெளிக்குள் செரிக்கும்

உணவாகத் தேர்ந்து உண்ணவேண்டும். அவ்வாறு உண்பதை வழக்கமாகக்கொண்டுவிட்டால், நோய்வராது ஆகவே அதுதீர்க்கும் மருந்தும் தேவைஇரார்து. இதையும் உணர்த்தியுள்ளார் வள்ளுவர்.

''மருந்துஎன வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்'' (942)

நம் உடலுக்கு நோய்களைத்தருவதும், நோய்வராமல் தடுப்பதும், உட்கொள்ளும் உணவே ஆகும். ஆகவேநோயற்ற வாழ்வு வாழவிரும்புவான் ஒருவன்: உண்டஉணவு முழுமையாகக் செறித்து விட்டதைப் பசிஎடுப்பதால் அறிந்து கொண்டு, உடல் நலத்துக்கு ஒத்துப்போகும் உணவு வகைகளையே தேர்ந்து, அவ்வுணவும், நல்லசுவையுடையதாக இருப்பதால் உணவுபடைப்பவர், மேலும் உண்ணுமாறு வற்புறுத்தினும், அவர்கள் அன்பு வேண்டுகோளையும் மறுத்து வேண்டும் அளவே உண்பதை வழக்கமாக, விரதமாகக்கொள்வான் உயிர்க்குச் சிறுகேடும் வராது. இதைஉணர்ந்திருந்தமையினாலேயே சொல் சுருக்கத்தில் கருத்துடைய வள்ளுவர், உணவில் கருத்தாக இருக்க வேண்டும் என்பதைவலியுறுத்த ''அருந்தியது அற்றது போற்றி உணின் மருந்தென வேண்டா'' (942), ''அற்றால் அளவறிந்து உண்க'' (943), ''மாறல்ல உய்க்க துவரப்பசித்து'' (944) ''மறுத்து உண்ணின் ஊறுபாடு இல்லை உயிர்க்கு'' (945) என. ஒன்றிற்கு மேற்பட்ட குறட்பாக்களை செலவழித்துள்ளார்.

∴ ∴ ∴

# 5. வள்ளுவர் வகுத்த பொருளாதாரம்

முடியாட்சி, படையாட்சி குடியாட்சி என ஆட்சிமுறை எதுவேயாயினும், தன்நாட்டு மக்கள், பசி அறியாது, பிணி இல்லாது பகைப்பயம் அற்று வாழ வழி வகுப்பதே நல்லாட்சி யாளரின் நீங்காக் கடமையாகும். ''பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும்வளனும் சுரக்கு என வாழ்த்தி என்பது'' சிலம்பும் (5: 72-73) மேகலையும்(1: 70-71) ''பசி இல்லாகுக பிணிகேண் நீங்குக'' என்பது ஐங்குறுநூறு (15)

''உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு'' என்பது குறள் (724)

உடலே உணவினால்ஆன பிண்டம்தான், அது உணவையே முதலாகக் கொண்டுள்ளது. ஆகவே மக்கள் உயிரோடு வாழவேண்டின், அதற்கு உணவுதான் துணை செய்யும். அவர்க்குப் பசியறியாப் பெருவாழ்க்கை அளிப்பது உயிர்கொடுத்தது போலாம், ''உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே; உண்டி முதற்றே உணவின் பிண்டம்'' என்பது புறநானூறு (18); ''மண்திணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம், உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே' என்பது மணிமேகலை (11: 95-96), ''மக்கள் யாக்கை உணவின் பிண்டம்'' என்பதும் மணிமேகலைதான் (9: 90) ஆக, பசி, பிணி, பகை மூன்றனுள், முதற்கண் போக்க வேண்டுவது பசி.

விளைநிலம், வளம்தரும் நல்லதாகவும், குறைவறியா நீர்வளம் வாய்த்ததாகும் அமைந்தவழியே உணவினைப் பெறல் இயலும். நீர்வளம் இன்மையால், அரும்பாடுபட்டுப்

பெருஞ்செலவுசெய்து விளைத்துவிட்டு, விதைத்தவிதை முளைவிட்டு வெளிப்படவும், விளைந்து பயன்தரவும் இன்றியமையா நீருக்கு மழைஒன்றையே எதிர்நோக்கி இருக்கும் நிலம், கடல்போல் பரந்துகிடப்பினும், சிறிதும் பயன்படாது. உடையானுக்குஉரிய பயன்தராது; நாடாளும் மன்னனுக்கும் உதவாது. ''வித்திவான் நோக்கும் புன்புலம் கண்ணகன் வைப்பிற்று ஆயினும், நண்ணி ஆளும் இறைவன் நாட்கு உதவாது'' என்பது புறநானூறு (18).

ஆகவே ஒருநாட்டின் செல்வவளம் செழிக்கவேண்டின், அந்நாடு நீர்வளத்தைக் குறைவறப் பெற்றிருத்தல் வேண்டும். இதைஉணர்ந்தவர் வள்ளுவர். அதனால்தான், அவர் தாம் பாடத்தொடங்கிய திருக்குறள் பாடி முடிய வேண்டிக் கடவுளை வாழ்த்திவிட்டு, நூலைத் தொடங்கும் நிலயிலேயே, நாட்டிற்கு நீர்வளம் தருவதாய மழை வளத்தைப்பற்றி ''வான்சிறப்பு'' எனும் தலைப்பிட்டுப்பாடி வைத்துள்ளார்.

தன்னை உண்டாரை இளவறியாப் பெருவாழ்வில் வாழவைக்க வல்லதாய அமிழ்தம் போன்றது, மழை (''அமிழ்தம் என்று உணரற்பாற்று) உண்பார்க்கு உணவுப் பொருட்களை உண்டாக்குவதோடு. தானும் உணவாகிப் பயன்படுவதுமழை (''துப்பு ஆக்கி—துப்பு ஆய தூஉம் மழை''.) பருவந்தோறும் பொய்யாது பெய்யும் மழை ஏதேனும் ஒரு ஆண்டில் பொய்த்து விடின் உலகம் பெருநீராம் கடலால் சூழப்பட்டிருப்பினும்; அவ்வுலகில், பசிப்பிணி, மக்களிடையே நிலைபெற்று நின்று வருத்தத் தொடங்கிவிடும் (உள்நின்று உடற்றும் பசி''.) சூருவளிக்காற்ருேடு கூடிய மழை. போதுமான அளவு

பெய்யத்தவறிவிடுமாயின். உழவர் தம், ஏர்த் தொழிலைச் செய்யார்'' ஏரின் உழார் உழவர்'' அவ்வாறு பொய்யாது இருந்து நாட்டவரைக் கெடுக்கவல்லதூஉம் மழைதான் பின்னர் அவர் வேண்டுமளவு பெய்து, அவர்களை வாழவைப்பதும் மழைதான், ''கெடுப்பதூஉம் எடுப்பதூஉம் எல்லாம் மழை'' சிறிது ஈரம் இருந்தாலே முளைத்துத் தலைகாட்ட வல்லதாய புல்லும் மழைத்துளி விழாதாயின் தலைகாட்டாது, ''பசும்புல் தலை காண்பது அரிது''

பெருநீரால் நிறைந்த கடலும், அக்கடல் நீரைக்குடித்தே மழைபெய்யும் மேகம்தன் தொழிலைச் செய்யத்தவறி விடுமாயின், முத்தும் பவளமும்போலும் செல்வவளத்தையும் மீனும் நண்டும்போலும் உணவு வளத்தையும் தரும்அக்கடலும் தன் கடமையில்குன்றி விடும்'' நெடுங் கடலும் தன் நீர்மைகுன்றும்'' மழைபெய்யாது வறண்டு விடுமேல், கடவுள்களுக்குச் செய்ய வேண்டியவாய நாள் வழிபாடும் ஆண்டுவிழாவும் நடைபெறா ''சிறப்பொடுபூசனை செல்லாது'' வானம்தான்வழங்க வேண்டி, மழையாகிய தானத்தை வழங்காது மறுத்துவிடின் உலகில் தானமும் நடைபெறாது தவமும் நிலைபெறாது. ''தானம் தவம் இரண்டும் தங்கா'' முடிந்த முடிவாகக் கூறவேண்டின் நீர் இல்லாதுபோயின் உலகமே இல்லை ''நீர் இன்றி அமையாது உலகு.''

இவ்வாறு ஒன்றல்ல பத்து குறட்பாக்களில் மழை வளத்தை, அதுதரும் நீர் வளத்தைப் பாராட்டியும் நீர் வளத்தின் இன்றியமையாமையினைக் குறைவறக் கூறி விட்டதாக மனநிறைவு உண்டாகவில்லை வள்ளுவர்க்கு, அதனால் தம் நூலிடையே வாய்க்குமிடமெல்லாம், நீர்வளப் பெருமையை வாயாரப்பாராட்டிச் செல்வதை மேற் கொண்டுள்ளார்.

கடமையில் தவறாக் கற்புடைய மனைவி, வேண்டும் போதெல்லாம் வேண்டும் பயன் அளிக்கவல்ல தெய்வம் போன்றவள் என வாழ்க்கைத்துணைவியின் பெருமை பாடவந்த வள்ளுவர். அவளை, உழவர் வேண்டும் போதெல்லாம் வேண்டும் அளவு பெய்து துணைசெய்யும் மழைக்கு உவமையாக்குவதன் மூலம் மழையின் பெருமையினைப் பாராட்டியுள்ளார். "பெய்எனப் பெய்யும் மழை" (55)

அறநெறிப்படி அரசாள்வான் பெருமை கூறவந்த வள்ளுவர், அத்தகையான் நாட்டில்தான் பசி, பிணி, பகையறியா நல்வாழ்வின் நல்லதுணைகளாம். மழையும், அதுதுணை செய்ய உணவாகும். விளைபொருளும் உணவாகும் எனக்கூறும் இடத்தில் மழையின் பெருமை யினைப் பாராட்டியுள்ளார். "மன்னவன் நாட்ட பெயலும் விளையுளும் தொக்கு" (545)

நாடாளும் வேந்தன் தன்நாட்டு மக்களிடத்தில் செலுத்த வேண்டிய அருள் உடைமையினைச் செலுத்தத் தவறி விடுவனாயின், அந்நாட்டு மக்கள் படநேரிடும் துன்பம் எவ்வளவு கொடிதாம் என்பதை உலகிற்கு உணர்த்த விரும்பிய வள்ளுவர், அதற்கு உவமையாகப் பெய்து உலகத்து உயிர்களை வாழவைக்க வேண்டிய மழை பொய்து விடுமானால், மக்களும் மற்ற உயிர்வகைகளும் எந்துணைக் கொடுமைக்கு உள்ளாக நேரிடும் என்பதைக் கூறிய தன்மூலம் மழையின் மாண்பினை உணர்த்தியுள்ளார் "துளி இன்மை ஞாலத்திற்குஎற்று? (557)

அதேபோல் அரசாள்வான் ஆட்சிமுறை தவறி அல்லது செய்யத் தொடங்கிவிடுவராயின் அவன் நாட்டில், மழை

தன்கடமையைச் செய்ய மறுத்து அவன்நாட்டில் பெய்யாது இருந்து அவனைத்தண்டிக்கும் எனக் கூறியதன் மூலம், நல்லவர்க்குத்துணைபோகும் மழை அல்லாதாரை அல்லலுக்கு ஆளாக்கும் என்பதன் மூலம், அறவழி நடைபெறத்துணை செய்யவல்லதான மழையின் பெருமையைப் பார்அறியச் செய்துள்ளார் ''உளவுகோடி, ஒல்லாது வானம் பெயல்'' (559),

ஒருநட்டிற்கு இலக்கணம் வகுத்திருக்கும் வள்ளுவர், அந்நாட்டின் தேவைபலவற்றுள், மழைகுறைவறப் பெய்வதால், உண்ணுதற்கும், உணவினை உளவாக்குதற்கும் உற்றதுணையாய் நிற்கும் நீர்நிலைகளில் தேங்கி நிற்கும் நீரும், ஆற்றுமணலை அகழ்ந்தாலும், ஆழ்ந்த கிணறுகளை வெட்டினாலும் பீரிட்டுச்சுரக்கும் ஊற்றுநீரும், பெருமழை பெய்வதால் பனிப்பாறைகள் உருகுவதாலும், பெருமலைகளிலிருந்து உருண்டோடிவரும் நீரும் இன்றியமையாதன எனக்கூறியிருப்பதன் மூலமும் நீரின் இன்றின்மையாமையினைக் கூறியுள்ளார் ''இருபுனலும் வருபுனலும் நாட்டிற்கு உறுப்பு'' (737)

மழையின் இன்றியமையாமையினைக் காதலர் வாழ்க்கைக்கு இலக்கணம் வகுக்கும் நிலையிலும், வள்ளுவர், மறந்துவிடவில்லை. தம்மை விரும்பும் காதலிக்குக் காதலன் காட்டும் அன்பும் அருளும், உழுதுண்டு வாழும் உழவர் பெருமக்களுக்கு, அவர்கள் வேண்டும்போது வேண்டும் அளவே பெய்யும் மழையை உவமை ஆக்கியதன் மூலமும் உள்ள அமைதிபெற்றுள்ளார். ''வாழ்வார்க்கு வானம் பயத்தற்று'' (1192)

ஆக, நாட்டின் நல்வாழ்விற்கு நீர்வளம் இன்றியமை யாதது என்பதும், அவ்வளம் மழையினாலேயேஆகும் என்பதும் உறுதியாயின, அம்மழை சிலபல ஆண்டுகளில்

ஒரோவழி தொடர்ந்து வறண்டுபோதலும் உண்டு அவ்வாறு மழைமாறிப்போகும் காலத்திலும் நாட்டின் நீர்வளம் குறைதல் கூடாது. அதுஅறியும் நல்லாடி, மழைபெய்யும் காலத்தே அம்மழைநீரைத் தேக்கிவைத்தற்காம் பெரியபெரிய நீர்த்தேக்கங்களையும் ஏரிகளையும், குளங்கலளயும் வெட்டி வைத்திருப்பதும். அவையும் வறண்டுபோகும் காலத்தில், பயன் அளிக்கா, ஆழ்கிணறுகளை ஆங்காங்கே தோண்டி வைத்திருப்பதும், நாடாள்வாரின் தலையாய கடமை ஆகும். அஃதுஅறிந்து செயல்படும் அரசே, அறிவு அறியா நிலைபேறுடைதாகும். "நிலன்நெறி மருங்கின் நீர்நிலை பெருகத்தட்டோர் அம்ம இவண் தட்டோரே; தள்ளாதோர் இவண் தள்ளாதோரே". என்பது பாண்டியன் நெடுஞ் செழியனுக்குப் புலவர் குடபுலவியனார் கூறிய அறிவுரை. இது அறிந்து செயல்பட்ட கரிகாற்பெருவளத்தானைப் பாராட்டியுள்ளார் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். "குளம்தொட்டு வளம் பெருக்கி" (பட்டினப்பாலை: 284)

ஒருநாட்டில், நீர்வளம் வாய்த்துவிட்டால் மட்டும் போதாது, நீர் துணைசெய்ய விளையும். நிலமும் நல்லதாதல் வேண்டும் நிலம் நல்லது அல்லவாயின் அந் நிலத்தைச் சேர்ந்த நல்லநீரும் நல்லது அல்லதாகிவிடும், இதையும் உணர்ந்திருந்தார் வள்ளுவர். நல்லாரோடு சேரும் ஒருவன் நல்லன் ஆதற்கும், நல்லவரல்லாதோடு சேரும் நல்லவனும், நல்லவன் அல்லாதனாகிவிடும். உலகியல் உண்மையை விளக்க, நிலத்தின் இயல்புக்கு ஏற்ப, நல்ல தாகவும், நல்லது அல்லதாகவும் மாறிவிடும். நீரின் இயல்பை உவமை ஆக்கி இருப்பது காண்க.

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு" (452)

நட்ட பயிர் நன்கு கிளைத்து வளர்ந்து பயன் அளிப்பதற்கு ஏற்ப, நிலமும், நீரும் கலந்து சேறுபடுதல் வேண்டும். காதலன் உள்ளமும், காதலி உள்ளமும், இரு உள்ளங்கள் என்ற நிலைமறைய, ஓர் உள்ளம், என்ற உயர்ந்த நிலைக்கு ஆளாகும் இயல்பை விளக்க புலவர் ஒருவர். செம்மண் நிலமும் அதில்பெய்த மழை நீரும், ஒன்று கலந்து செஞ்சேறு ஆவதை உவமையாக்கி, அவ்வுவமைச் சிறப்பாலேயே, செம்புலப் பெயல்நீரார் என்ற சிறப்புப்பெயர் பெற்று விட்டதையும் காண்க. ''செம்புலப் பெயல்நீர்போல அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே'' குறுந் (140) இதையும் உணர்ந்திருந்தார் திருவள்ளுவர் உள்ளத்தால் ஒன்றுபட்ட கணவன் மனைவியவர்க்கு. நிலத்தையும், அந்நிலத்தோடு கலந்த நீரையும் உவமை காட்டியுள்ளது காண்க. ''நிலத்தொடு நீர் இயைந் தன்னார். (1323)

நீரும் நிலமும் வாய்ந்து விட்டால் மட்டும் போதாது அவற்றைப் பயன்கொண்டு பயிர்செய்து, உணவுப் பொட்களை விளைவிக்கும் உழவர் பெருமக்களும் தேவை; அவர்கள் அத்தொழிலை மனம்விரும்பி மேற்கொள்ளும் வண்ணம், அவர்கள் செய்யும் தொழிலையும், அவர்களையும் சிறப்புச்செய்தல் வேண்டும்எனவும் உனர்ந்த வள்ளுவர் ''மக்கள் எத்தொழில் மேற்கொண்டாலும், அவர்களுக் கெல்லாம் உணவுஅளித்து அவர்களை வாழவைப்பது உழவுத்தொழிலே; ஆகவே தொழில்களில் தலையாய சிறப்புடையது உழவுத்தொழில் ''உழவேதலை'' (1031) என ''உழவுத்தொழிலையும், ''உழுவார் உலகத்தவர்க்கு ஆணி'' (1032). ''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்''(1033') ''பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்'' (1034) ''இரவார்; இரப்பார்க்கு ஈவர்'' (1035) என உழவர்பெருமக்களையும் பாராட்டியுள்ளார்.

உழுதொழில் நன்குநடைபெற உணவு உற்பத்தி பெருகுவதால் நாட்டின் பொருளாதாரம் பெருமளவில் நிறைவுபெறும் என்பது உண்மை. ஆனால் நாட்டின் உணவோடு நிறைவுபெற்று விடுவதில்லை. தனி மனிதனாயின், உடை, உறையுள், கல்விபோலும் எண்ணற்ற தேவைகளும், நாடாளும் அரசாயின், அரசுப்பணியாளர் ஊதியம், கல்வி, மருத்துவம்போலும் நல்வாழ்வுப்பணிகள், நாடுகாக்கும் படைக்கலம் பேணல்போலும் எண்ணற்ற தேவைகள் உள. அதற்குப் பெருப்பொருள் தேவை. இதையும் உணர்ந்துள்ளார் வள்ளுவர்.

ஒரு பொருளாக மதிக்கத்தகாதவரையும், பலராலும் மதிக்கச் செய்யவல்லது பொருட்செல்வம் அல்லது வேறுசெல்வம் இல்லை.

> "பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
> பொருளல்லது இல்லை பொருள்" (751)

உயர்குடிப்பிறப்பால், அறிவால், ஆண்மையால், அழகால் ஒருவர் உயர்ந்திருப்பினும், அவர்பால் பொருள் இல்லையேல் அவரையாரும் மதிக்காமை மட்டும் அல்ல எள்ளிநகையாடுவதும் செய்வர், மேலை கூறிய நலன் எதுவும் இல்லையாயினும், ஒருவர்பால் செல்வம்மட்டும் குவிந்து கிடப்பின், உலகத்தவர் அனைவரும் அவரைப்புகழ்ந்து சிறப்புச் செய்வர்.

> "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை
> எல்லாரும் செய்வர் சிறப்பு" (752)

பொருள் என்பது ஓர் அணையா விளக்கு; அதைப் பெற்றவர் எங்குச்சென்று எப்பேர்ப்பட்ட பகையையும் வெல்லக்கருதி விடுவராயின், அவர் பகையாம் இருளைப்

போக்கி, வெற்றியாம் ஒளியினைப்பரப்பிவிடும்'' பொருள் என்றும் பொய்யாவிளக்கம்; இருள்களுக்கும் எண்ணிய தேயத்துச் சென்று (753) பொருள். அதைப் பெற்றவனுக்கு அறச் செல்வத்தையும் தரும்; இன்பச் செல்வத்தையும் தரும்; ''அறன் ஈனும்! இன்பமும் ஈனும்'' (754), ''பகைவர்களின் செருக்கினைச் சிறுகச்சிறுக அறுத்து அழிக்கவல்ல கூரியவாள் செல்வமே; அது அல்லது வேறுஇல்லை. ''செறுநர் செருக்கறுக்கும் எஃகு அதனில் கூரியது இல்'' (759) பொருளின் இன்றியமையாமை குறித்த திருவள்ளுவர் மதிப்பீடுகள் சில இவை.

பொருளின் சிறப்புக்களையெல்லாம் உணர்ந்து உணர்த்திய திருவள்ளுர், அதைப் பெறலாம் வழிகளையும் உணர்த்தியுள்ளார் தனிநபர்ஆயினும் அரசேஆயினும் பொருள்ஈட்டும் முதல்வழி, முதலீடுசெய்து தொழில் தொடங்கிப் பொருளைச் செய்வதாம். ''செய்கபொருளை, (759) என்பது அவர்களை. அரசனுக்குப் பொருள் சேர்க்கும் வழிகளில் தலையாயது பொருள் இயற்றல் அதாவதுசெய்தல் ''இயற்றலும் ஈட்டலும்'' என்பது குறள் (385). ''ஈட்டுக'' ''இயற்றுக'' என ஆணையிட்டுவிட்ட வள்ளுர் அதைஈட்டும் வழிமுறைகளையும் வகுத்துச் தந்துள்ளார் ''ஈட்டவேண்டின் அதற்கு முதல்தேவை. ''முதல்இலார்க்கு ஊதியம் இல்லை'' என அவர் அறிவுரை வழங்குவது காண்க (449) எடுக்கும் வினைமுதல்இழக்கும் வினையாகஅமைதல்கூடாது என்பதால் முதலீடுசெய்து ஈட்டத்தொடங்குமுன், அம்முயற்சியில் செலவிடவேண்டி வருவதுஎவ்வளவு, அவ்வாறு செலவிட்டால் வரும்ஆக்கம் எவ்வளவு என்பதை எண்ணிப்பார்த்து, அழிவினும், ஆக்கம் பெரிதாம் வழியே அம்முயற்சியில் இறங்குதல் வேண்டும் இதையும்கூறியுள்ளார் வள்ளுவர். ''அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி, வழிபயக்கும் ஊதியமும் சூழ்ந்து செயல்'' என்பது குறள் (461).

ஆக்கம் வேண்டும்தான், ஆனால் அந்த ஆக்கத்தை எப்படியாவது, எத்தகைய ஆக்கமாயினும் அடைந்துவிடுதல் வேண்டுமெனா எண்ணிவிடுதல் கூடாது. ஆக்கம் எவ்வளவு பெரிதேஆயினும், அப்பழுக்கற்ற ஆக்கமாக, அறவழியில் மட்டுமே வந்த ஆக்கமாக இருத்தல் வேண்டும் தென்புல மருங்கின் விண்டுநிறை "வாணன் வைத்த விருந்திபெறினும் பழிநமக்கு எழுகஎன்னாய்" (மதுரைக்காஞ்சி:202-204) என்பது மாங்குடிமருதனார். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்பால் கண்டபல சிறப்புக்களில் தலையாயது "பழிஎனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்" என்பது கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, உலகத்து நல்லோர்பால் கண்ட நல்லியல்புகளில் ஒன்று (புறம்: 183) "விரிநீர் உடுக்கை உலகம் பெறினும், அருநெறிதுயர் மகளிர்க்கு இருமணம் கூடுதல் இல்இயல்பு அன்றே" என்பது தமிழகத்து ஆயர்குலத்தவர்பால். சோழன் நல்லுருத்திரன் கண்ட நல்லியல்பு (முல்லைக்கலி: 14)

வரும் செல்வம். இவ்வாறு நல்வழியில் வரும் செல்வம் ஆதல்வேண்டும் என்பதிலும் வள்ளுவர் உறுதியாக உள்ளார். செல்வம், நடுநிலைமை தவறாது நின்று ஈட்டிய செல்வம் ஆதல் வேண்டும். அதுவே . அதை ஈட்டியவர்க்கே அல்லாமல், அவர் மக்களுக்கும், அம்மக்களின் மக்களுக்கு மாக வழிவழி அழியாது இருந்து உதவும்.

> "செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
> ஏச்சத்திற் கேமாப்பு உடைத்து" (112)

ஓர் உயிரை, அது மக்கள் உயிரே ஆயினும், மாக்கள் உயிரே ஆயினும், அதைக் கொல்வதால்வரும் செல்வம், ஒருவனைப் பெரிய வாழ்க்கையில்—செல்வம் கொழிக்கும்

வாழ்க்கையில் வைக்கும் என்றாலும் அச்செல்வத்தை வெறுத்து ஏற்க மறுத்துவிடவேண்டுமே ஒழிய அதை அடைய விரும்பலாகாது, இதையும் உணர்ந்துள்ளார் வள்ளுவர்.

''நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை.''

என்ற அவர் குறளினைக் காண்க (328)

செல்வம்தானே உழைத்துத்தன் உழைப்பால் வந்ததாதல் வேண்டும். அவ்வாறு வந்த செல்வம் சிறிதே ஆயினும், அதுகொண்டு வாழ்வதால் பெறலாகும் இன்பத்திற்கு இணையே இல்லை. இவ்வுணர்வு, நல்ல மக்களுக்கே அல்லாமல், மாக்களுக்கும் உண்டு. தாம் உழுதலால் நெல் விளைந்து, கதிர் முற்றி, அறுத்து அடித்து நெல்லை அகற்றி விட்டு, தன்முன்போட்ட வைக்கோலைத் தின்னும்போது, ஏர் உழுத காளைகள் இந்த வைக்கோல் தம் உழைப்பால் வந்தது என்பதால் மகிழ்ந்து செருக்குற்றுத் தின்னும் சிறப்பைப் புலவர்கள். வடமவண்ணக்கண் பெருஞ்சாத்தனாரும், கௌதமரும் பாராட்டியுள்ளனர். ''உழுத நோன்பகடு அழிகின்றிங்கு''; ''உழவொழி பெரும் பகடு அழிதின்றாங்கு'': (புறம்: 125;366) இதையும் வலியுறுத்துயுள்ளார் வள்ளுவர். தன்உழைப்பால் கிடைத்தது தெளிந்த நீர்போலும் கூழே ஆயினும், அதை உண்பதைவிட இனிமையான உணவுவேறு இல்லை என்ற பொருள்படவரும் அவர் குறளினைக் காண்க.

''தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலி னூங்கினியது இல்'' (1065)

பொருள் ஈட்டும் நிலையில் எத்தகைய செல்வத்தை. எத்தகைய முறையில் ஈட்டலாம் எனஅறிவுறுத்திய வள்ளுவர்.

எத்தகைய செல்வத்தை எத்தகைய வழிகளில் ஈட்டக்கூடாது என்பதையும் அறிவுறுத்தியுள்ளார்.

வேண்டியவர், வேண்டாதவர், அயலார் ஆகிய மூவகையின ரிடத்தும், நடுவுநிலைமையோடு நடந்துகொள்ள வேண்டும். அவ்வாறு நடந்துகொள்ளாது நடுவுநிலைமை தவறிநடந்து கொள்வதால் கிடைக்கும்செல்வம் கேடுஏதும்பயக்காது நல்லவனவற்றையே பயக்கும் என்றாலும், அத்தகைய செல்வத்தை ஒரு நொடிப்போதும் வைத்திராது; அது வந்தடைந்த அப்போதே அதைக் கைகழுவிவிட்டுவிட வேண்டும் என்பது ஒருவழிகாட்டுநெறி.

> ''நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
> அன்றே ஒழிய விடல்'' (113)

பிறர் பொருளை, அவர் அறியா நிலயில் களவாட முனைந்து சேர்ந்த செல்வம் அளவுகடந்து பெருகியதுபோல் தோன்றினும் பலநாள் திருடன் - ஒருநாள் பிடிபடுவான் என்பதற்கு ஏற்ப, அக்களவு ஒருநாள் வெளிப்பட்டுப்போக அச்செல்வம் எல்லாம் அறவே இல்லாமல் போய்விடும்'' ஆகவே களவாடிப் பொருள் தேடல் கூடாது இதுவும் அவர் வழிகாட்டும் நெறிதான்.

> '' களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
> ஆவது போலக் கெடும்'' (283)

ஊரும் உலகும் தூற்றும் பழிச்சொல் மலைபோல் குவியக் குவிய, ஒருவன் ஈட்டும் பெருஞ்செல்வத்தைக் காட்டிலும் சான்றோர்பால் பற்றிக்கிடக்கும் வறுமையே பலராலும் போற்றுதற்கு உரியதாகும்; ஆகவே பழியோடுவரும் பொருள் செல்வத்தை எவரும் பெறலாகாது மற்றுமொரு வழிகாட்டு நெறி இது.

"பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை" (657)

வஞ்சனை அதாவது பிறரை ஏமாற்றல்போலும் தீய செயல்களால் செல்வத்தைக் குவித்துவைத்துக் கொண்டு அதைப் பாதுகாத்துக்கிடத்தல் உலராத பச்சைக் களிமண்ணால் செய்யப்பெற்ற மண்பாண்டத்தில், தண்ணிரை நிறைத்துவைத்துக் காக்க முயன்றவன் செயல்போலும். அதாவது தண்ணீரே அல்லாமல் அதைத்தேக்கிவைத்திருந்த மண்பாண்டமும் இல்லாமல் போனதுபோல், வஞ்சையால் சேர்க்கப்பட்ட செல்வமே அல்லாமல். அதைச் சேர்த்தவனும்) இல்லமால் போய்விடுவன்; ஆகவே வஞ்சையால் சேரும் செல்வம் செல்வம் ஆகாது. இதையும்உணர்ந்துள்ளார் திருவள்ளுவர்.

"சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள் நீர் பெய்திரீஇ யற்று" (660)

பொருளை எவ்வகைகளில் ஈட்டலாம் எவ்வகைகளில் ஈட்டக்கூடாது என வழிகாட்டிநெறி வகுத்த வள்ளுவர். நல்லார் இடத்தில் சேர்ந்தசெல்வம் எவ்வளவு பயனுடையதாகும்; நல்லவர். அல்லதார்பால் சேர்ந்தசெல்வம் என்ன பாடுபாடும் என்பதையும் எடுத்து இயம்பியுள்ளார், வகைக்குச் சிற்சில குறட்பாக்கள்.

உலக இயல்பு அறிந்து வாழ்வதால், உலகத்துப் பெரியவர்களால் விரும்பப்படும். புகழப்படும் பேரறிவாளன் பெற்ற செல்வம், ஊரார்க்கு உண்ணுநீர் அளித்துப் பயன் அளிக்கும் பெருங்குளம் நீரால் நிறைந்து வழிவதுபோல். உற்றார். உறவினர், அயலார் ஆகிய அனைவர்க்கும் பயன்படும்; இதையும் கூறியுள்ளார் வள்ளுவர்.

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு" (215)

ஊருக்கெல்லாம் உயிர்களுக்கு-கெல்லாம் உதவும் நல்ல உள்ளம் வாய்த்த ஒருவன்பால் செல்வம் சேர்ந்துவிடின் அச்செல்வம், ஊரெல்லாம் கூடும். ஊர் மன்றத்தில், மா, பலா போலும் பழமரங்கள் வளர்ந்திருந்தால் அவை எவ்வாறு ஊர்மக்களுக்கெல்லாம் பயன்படுமோ அவ்வாறே உலகத்தவர் அனைவர்க்கும் பயன்படும். இதுவும் வள்ளுவர் வாக்குதான் !

"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்" (216)

அன்புடைமை, அருள்உடைமை, நாணம் உடைமை ஊருக்கெல்லாம் உதவும் உள்ளம் உடைமை கண்ணோட்டம், வாய்மை ஆகிய பண்புகளை உடைய பெருந்தகையாளன் ஒருவன்பால் சேர்ந்துவிடும் செல்வம், வேர், அடிமரம், கிளை, இலை, பூ, காய், கனி, ஆகிய அனைத்துப் பகுதிகளும், நோய்தீர்க்கும் மருந்தாகிப் பயன்படும் மரம்போல், அனைத்து வகையிலும், அனைத்தவர்க்கும் பயன்படும், இதுவும் அவர் அறிவுரையே.

"மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்" (217)

இனி, தகுதியில்லாதார் மாட்டுச்சேரும் செல்வம்படும் பாடுபற்றி வள்ளுவர் கூறுவன மூன்று.

பெற்றமாதா மடிப்பிச்சை எடுக்க மகன் கோதானம் செய்தானாம் என்பது நாட்டுப்பழமொழி. பேதை அதாவது, நல்லனவற்றை எல்லாம் கைகழுவ விட்டுவிட்டு நல்லன அல்லன வற்றையெல்லாம் வருந்தி வரவழைத்துக் கொள்பவன், அத்தகையான்பால் பெருஞ்செல்வம் வந்தடைவது அரிதல் ஒருவேளை அடைந்துவிட்டால்,

அச்செல்வத்தால், அவன் உற்றார், உறவினர் பயன் அடைவார்களா? அவன் அவர்களுக்கு உதவுவானா என்றால் இல்லை அவனோடுகூடி, அவன் இனிக்கப் பேசிப் பழகும் அயலார்களே பயன்அடைவர்; அவர்களுக்கே அவனும் வாரி வழங்குவன் இதுஓர் அறிவுரை.

''ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை'' (837)

அதுவேகுரங்கு; அதற்குக்கற்ளும் ஊற்றிவிட்டால் அதன் குறும்பாட்டத்திற்குச் சொல்லத் தேவையில்லை. அதேபோல், இயல்பாகவே பித்துபிடித்தவன் ஒருவன்; விட்டில் உள்ளதை வாரித்தெருவில் வீசுவன். தெருவில் உள்ளதை எடுத்துவீட்டுள் கொண்டுபோய் வைப்பன்; பொல்லாத வம்புகளையெல்லாம் வரவழைத்து விடுவன். அத்தகையானுக்கு மதுவும் கொடுத்து விட்டால், அவன் கொடுஞ்செயலுக்கு அளவே இராது, பேதை, அதாவது இயல்பாகவே செய்யத்தகாதன எல்லாம் செய்பவன். அத்தகையான் கையில் செல்வம் சேர்ந்துவிட்டால்; அவன் செய்யும் தவறுகளுக்கு அளவே இராது. இதுவும் வள்ளுவர்கண்ட உண்மை.

''மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின்'' (838)

பொருள் ஈட்டுவது, தான்வாழ; பிறரை-வாழ்விக்க; அப்போது தான் அப்பொருள் பயனுடையதாகும் அதற்கு மாறாக பெரும்பொருள் சேர்த்துவைத்துக் கொண்டிருப்பவன்; அப்பொருளைத் தனக்கும் பயன்படுத்திக் கொள்ளாமல் தேவைப்படும் பிறர்க்குக் கொடுத்து உதவுவதும் செய்யாது

வீணே வைத்திருப்பனாயின் அச்செல்வம் அவனுக்கே கேடு விளைத்து விடும்; அவன்பால் பெரும்பொருள்-பயன் இன்றிக் குவிந்து கிடப்பது காணும் பிறர். அதை கவர்ந்து கொள்ளவே முயல்வர் அம் முயற்சிக்கும் அவன் இடையூராக இருப்பான் என அறிந்தால், அவனைத்தீர்த் கட்டவும் செய்வர். ஆக சேர்ந்த செல்வமே, அவன் உயிரைப் போக்கிவிடும்.

''ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் தக்கார்க்கொன்று
ஈதல் இயல்பிலா தான்'' (1006)

எவராலும் விரும்பப்படாதவன்; மாறாக-அனைவராலும் வெறுக்கப்படுபவன் ஒருவன் பால் செல்வம்சேர்ந்துவிடின் ஊர் நடுவே நச்சுமரம் அதாவது, அதன் வேர், பட்டை, இலை, பூ, காய், கனி, இவற்றில் எதையேனும் தின்றாலோ தொட்டாலோஉயிரைப்போக்கிடும் மரம்வளர்ந்து விடுமாயின்-எப்படி, அது ஊராருக் கெல்லாம் உறுதுயர் விளைக்குமோ, அதுபோல் கொடியோன் பால் சேர்ந்த செல்வமும் பலர்க்கும் உயிர்போக்கும் கொடுமையைச் செய்துவிடும்.

''நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று'' (1008)

பொருளின் இன்றியமையாமை. அப்பொருளை ஈட்டும் வழிமுறைகள்; அவ்வழிமுறைகளில் ஏற்கும் வழிமுறைகள், ஏற்கலாகா வழிமுறைகள், ஏற்கும் வழிமுறைகளில் வந்த செல்வத்தின் சிறப்பு ஏற்கலாகா வழிமுறைகளில் வந்த செல்வத்தின் இழிவு ஆகியவைகளை விளக்கிய வள்ளுவர். அடுத்து அப்பொருளைக் காக்கும் வழிமுறைகளை விளக்கியுள்ளார்.

ஒரு நாட்டில் சிலரே செல்வம் உடையராகவும் பலர் வறியராகவும் இருப்பதற்குக் காரணம். அந்நாட்டில் பொருள் சேர்க்கும் முயற்சி உடையார் சிலராகவும் முயற்சி ஏதும் மேற்கொள்ளாது. சோம்பி இருப்பார் பலராகவும் இருப்பதே காரணம். ஆகவே இடைவிடா முயற்சி வேண்டும்.

"குந்தித்தின்றால் குன்றும் மறையும்" என்பது பழமொழி, பொருள் சேர்ந்துவிட்டது. இனி நாம் உழைக்கத் தேவை இல்லை. ஓய்வு கொண்டு விடலாம் எனக் கருதிவிடக்கூடாது. இருந்து விட்டால் மலைபோல் குவிந்து கிடந்த பெருஞ்செல்வம் நாளடைவில் அறவே இல்லாகிப் போய்விடும். முயற்சி செல்வத்தைச் சேர்ப்பது! முயற்சி இல்லாமை, செல்வம் இல்லாமைக்குக் கொண்டு போய்விடுவது. இந்த உண்மைகளையும் வள்ளுவர் அறிவுறுத்தியுள்ளார்.

"இலர்பல ராகிய காரணம் நோற்பார்
(முயற்சியுடையார்)
சிலர் பலர் நோலா தவர்" (270)

"முயற்சிதிருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்" (616)

என்பன அவ்வறிவுரைகள்,

ஈட்டிவைத்திருக்கும் பொருள் அழிவுக்குப் பல வழிகள் உள்ளன. பெருவெள்ளம், பெருநெருப்பு இவற்றாலும் அழிவுறும்: கள்வரால் அழிவுறும் பொருளுடையார் கவனக்குறைவால் கைவிடப்படும், சூதாடல் போலும் இழிசெயல்களால் அழிவுற்றுப் போகும். ஆகவே செல்வத்தை ஈட்டிவிட்டால் மட்டும் போதாது; அதுஎவ்வகையிலும்

அழிவுற்றுப் போகாவண்ணம் காத்தலும் வேண்டும் இதையும் எச்சரித்துள்ளார் வள்ளுவர். ''பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை'' என்பதுஅது.

முயன்று ஓரளவு பொருள் ஈட்டி வைத்திருப்பான் ஒருவன், ''போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து'', ''செல்வம் என்பது சிந்தையின் நிறைவே'' என்பதற்கு ஏற்ப; பெற்ற செல்வத்தோடு மனநிறைவு கொள்ளுதல் வேண்டும். தான் பெற்றிருக்கும் செல்வத்தினும் பெருஞ்செல்வம் பெற்றிருப்பான் செல்வ நிலை நோக்கிப் பொறாமை கொள்ளுதல் கூடாது மாறாகப்பொறாமை கொண்டுவிட்டால். அது. அவனை அறமல்லாச் செயல்களையெல்லாம் செய்யத் தூண்டும். தூண்டியவழி செயல் படத் தொடங்கிவிடுவன். அது, அவன்பால், அவன் உழைப்பால் குவிந்திருந்த செல்வங்களை அழித்து விடுவதோடு அவனைத் தீயில் தள்ளினார் போலும் கொடுந் துன்பத்திலும் கொண்டு போய்த்தள்ளிவிடும். இதை உணர்ந்தவர் வள்ளுவர்: ஆகவே.

''அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்துவிடும்'' (168)

என எச்சரித்துள்ளார்.

இதுகாறும் வள்ளுவர் கூறியன அனைத்தும் அரசுத் தலைமைக்கண் உள்ளார் உட்பட, நாட்டவர் அனைவர்க்கும் பொதுவான பொருளாதாரக் கொள்கைகள். அவை கூறிய அவர். நாடாளும் தலைமகனுக்கு மட்டுமே பொருந்தும் பொருளாதாரக் கொள்கைகள் சிறவற்றையும் கூறியுள்ளார்.

''செய்க பொருளை'' என்பது அனைவர்க்கும் பொருந்து வதுபேலவே, அரசாள்வார்க்கும்பெருந்தும் வளம் தரும் தொழில்களை அரசுதானே தொடங்கிப் பெருள்களை இயற்றுவது அரசு பொருள் ஈட்டும் வழிகளில் ஒன்று.

அடுத்து ஈட்டும் பொருள்கள், பாடுபட்டுத்தேடிப் பெற்ற பணத்தைக் கொண்டு தானும்பயன் கொள்ளாமல், பிறர்க்குஉதவுவதும் செய்யாது புதைத்து வைத்துவிட்டு மாண்டுபோக, நெடுங்காலம் மண்ணுள் மறைந்துகிடந்து பின்னர் பிறர்ஒருவரால் தோண்டி எடுக்கப்பட்ட பொருள் இருப்பது தெரியாமல் மண்ணுள்மறைத்து கிடந்து; பின்னர் அறியப்பட்டு, தோண்டிஎடுக்கப்பட்ட பொன், வெள்ளி, இரும்பு போல்வனவும், எரிஎண்ணெய், எரிகாற்று போல்வனவும் மலைக்காடுகளில் மண்டிக்கிடக்கும். சந்தனம், தேக்கு போல்வனவும் கடல்படு பொருள்களாம் உப்பு, மீன் போல்வனவும் ஆகிய பொருள்களாம்.

நிலவரி நீர்வரி, தொழில்வரி, வருமானவரி, எற்றுமதிவரி, இறக்குமதிவரி போலும் மக்கள்தரும் வரிகள் மூலம் வரும் வளனும் அரசு ஈட்டும் பொருள்களாம்.

வரிகள் மூலம் கிடைக்கும் பொருள். பொருள் ஈட்டும் வழிகளில் ஒன்றே ஒழிய அது ஒன்றையே பொருள் ஈட்டும் வழியாகக்கொண்டு விடுதல் கூடாது. குடிமக்களைப் பசி, பிணி, பகைகளிலிருந்து காப்பதற்குக் கைம்மாறாக, அவர்கள் தருவதேவரி. அதனால் தான் அதற்குக் ''குடிபுரவு'' எனும் பெயரும் இடப்பட்டுள்ளது. ஆக, அது, அளவோடு இருத்தல் வேண்டும். நாடாள்வான் திறமை உள்ளவனாயின். அதை அளவோடு, பெறுவன்: திறமை அற்றவனாயின், அது ஒன்றையை நம்பி, அளவுக்கு மீறிப் பெறவிரும்புவன். இந்த உண்மையை. நாடாண்ட நல்லவன் ஆகிய, சோழன் நலங்கிள்ளியே கூறியுள்ளான். வரிமேல்வரி வாங்குவோனை. ஆளுந்திறமையற்ற சிறியவன் எனப் பழித்துள்ளான். ''குடிபுரவு இருக்கும் கூர்இல் ஆண்மைச் சிறியோன்''. (75) என்பது புறநானூறு.

வரியினை அளவறிந்து வாங்குவதால் ஆகும், நன்மைகளையும், அளவறிந்து வாங்குவதால் நேரும் கேடுகளையும், புலவர் பிசிராந்தையார். ஒரு பாட்டில் விளங்க எடுத்துக்காட்டியுள்ளார். ''விளைநிலம் மாஅளவு மிகச்சிறிது என்றாலும், அதையும் முறையாகப் பயிரிட்டு, அதில் விளையும் உணவுப்பொருளை நாள்தோறும் இவ்வளவு தான் எனக் கணக்கிட்டுத் தந்துவந்தால் அதுவே, யானைக்குப் பல நாளைய உணவாகப் பயன்பெறும். மாறாகப் பல வேலிஅளவு பரந்துள்ள பெருநிலத்தில் பயிர் செய்துவிட்டு, விளைந்து பண்பட்டிருக்கும் காலத்தே யானை ஒன்றை, அந்நிலத்தில் அவிழ்த்துவிட்டு, அது விரும்பியாங்கு உண்ணச் செய்துவிடின், பரந்த அந்த நிலத்தில் விளைந்து நிற்கும் பயிர் அனைத்தும் ஒரே நாளில் பாழாகிவிடும். யானையின் வாயுள் சென்று பயன்படுவதினும் அதன் கால் களால் மிதியுண்டு அழிவனவே பெரும்பகுதியாம்.

அதைப் போலவே, ஆளும் அரசன் அறிவுடையனாகிக் குடிகளிடமிருந்து எவ்வளவு வரிபெறலாம் அவர்களால் எவ்வளவு கொடுக்க இயலும் என்பது அறிந்து, அதற்கேற்ப, ஆறிலொரு கடமைஎன்பதைப்போல்,ஒழுங்கான ஒருமுறையை அடிப்படையாகக் கொண்டு, வரிவாங்குவனாயின், மக்கள் மன்னனுக்குக் கொடுக்க வேண்டியதையும் கொடுத்துவிட்டுத் தாங்களும் நன்கு வாழ்வர், அரசனும் நல்வாழ்வு வாழ்வன் அதற்கு மாறாக. அரசன் நாளும் கொடுங்கோலனாய்க் குடிகள் அழ அழ, அவரிடமிருந்து வரி வாங்குவதையே அற நெறியாகக் கருதுவோரையே அமைச்சராகவும் கொண்டு. குடிகள் வருந்த வரிவாங்குவதை வழக்கமாகக் கொண்டுவிடு வனாயின், மக்கள் வரிச்சுமை தாங்கமாட்டாது வருந்தி வாழ்விழந்து வாடிவதைவர். அவனும், அந்நாட்டு அரசனாய் நெடிதுநாள் வாழான்'' இது அவர் அறிவுரை, வருவது அவர் பாட்டு.

''காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே,
மாநிறைவு இல்லதும் பன்னாட்டு ஆகும்;
நூறு செறு ஆயினும் தமித்துப் புக்கு உணினே
வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்.
அறிவுடை வேந்தன் நெறிஅறிந்து கொளினே,
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்;
மெல்லியள் கிழவன்ஆகி, வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு,
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானைபுக்க புலம்போலத்,
தானும் உண்ணான் உலகமும் கெடுமே''.

—புறம்;184.

நாடாள்வான், தன்குடிமக்கள்பால், தருகவரி என இரு கை ஏந்தி இரந்து நிற்பனாயினும், அது, வழிப்போவாரை வழிமறித்துக் கைவேலைக் காட்டி அச்சுறுத்தி, அவர் கைப்பொருளைக் கவர்வதற்கு நிகராகும்என, வரித்தண்டலை வன்மையாகக் கண்டித்துள்ளார் வள்ளுவர்.

''வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு'' (552)

பொருளை ஈட்டிவிட்டால் மட்டும் போதாது. பொருள் அழிவிற்கு வாய்ப்புக்கள் அதிகம். இயற்கையின் சீற்றம், பகைவர், கொள்ளையர், கள்வர்போல்வரால் அழிவுநேரா வண்ணம் பொருளைக்காத்தல் வேண்டும்.

இயற்றி, ஈட்டிக், காத்தபொருளாம் பயன்தரும் வகைகளில் பகிர்ந்து அளிக்கவும்வேண்டும். பொருள்நிலை குறித்த இவை அனைத்தையும் ஒரு குறளில் கூறியுள்ளார் வள்ளுவர்,

"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வுல்ல தரசு" (385)

இறுதியாக, ஒரு வினாவிற்கு விடைஅளித்துப் பொருலாதார விளக்கத்தை முடித்து வைத்துள்ளார். பொருள்வரும் வழிகள் அறவே அடைபட்டுப்போகவில்லை ஆயினும், குறைந்து போய்விட்டால் என்னசெய்வது? இது வினா கவலைப்படாதே; செலவினங்கள், வரவினங்களைக் காட்டிலும் மிகுந்துவிடாவாறு பார்த்துக்கொள் அதுபோதும்; பொருட்குறைபாடு. நேர்ந்து விடாது; இதுவிடை.

"ஆகாறு அளவிட்டி தாயினுங் கேடில்லை
போகாறு அகலாக் கடை" (478)



## இணைப்பு: 1

# *என் கடன் பணி செய்து கிடப்பதே! என் தமிழ்ப்பணி

புலவர் **கா. கோவிந்தன்**

1932 : செய்யாறு உயர்நிலைப் பள்ளியில் 8-வது வகுப்பில் படித்துக்கொண்டிருக்கிறேன். தமிழாசிரியர், உயர்திருவாளர், மகாவித்வான் வீரபத்திரப் பிள்ளை அவர்கள். எங்கள் ஊரில் பானு கவியார் என்ற பெரும் புலவர், துறவியார் இருந்தார். வடலூர் வள்ளலார் இயற்றிய அருட்பா குறித்து எழுந்த 'அருட்பா, மருட்பா' வாதத்தில், அருட்பா வாத நெறியாளரோடு நின்று வாதிட்ட வன்மையாளர். எங்களூரில் கோயில்கொண்டிருக்கும் அருள்மிகு வேதபுரீஸ்வரர், திருஞானசம்பந்தர் அவர்களால், ஆண்பனை பெண்பனையாகப் பாடப் பெற்ற பெருமைக்குரிய பெருமான். அவர் துணைவியார் பாலகுஜாம்பிகையார். அந்த அம்மையார்மீது 'இளமுலை நாயகி பிள்ளைத் தமிழ்' என்ற பொருள் செறிந்த நூலைப் பாடியவர் பானுகவியார். அத்தகு பெரும் புலமை வாய்ந்த பானுகவியாரை வாதத்தில் வென்றவர் திரு. வீரபத்திரப் பிள்ளை அவர்கள்.

அவர் வேலூரில், இன்று வெங்கடேசுவரா மேல் நிலைப் பள்ளி என அழைக்கப்பெறும் அன்றைய ஸ்ரீ மகந்த தேவஸ்தான உயர்நிலைப் பள்ளிக்குச் சென்று விட்டார். அவர் இடத்திற்குக் காவேரிப்பாக்கம் உயர் நிலைப் பள்ளியில் பணிபுரிந்திருந்த திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் வந்துசேர்ந்தார். தென்

*புலவர் அவர்கள் கடைசியாக எழுதிய கட்டுரை.

ஆர்க்காடு மாவட்டம், மயிலத்துக்கு மேற்கில் பத்து கி.மீ. தொலைவில் உள்ள ஔவையார்குப்பம் என்ற ஊரில், அவ்வூர்க் கணக்கு எழுதிவந்த திரு. சுந்தரம் பிள்ளை அவர்களின் மகனாகப் பிறந்தமையால் ஔவை சு. துரை சாமிப் பிள்ளை என அழைக்கப்பட்டவர்.

மகாவித்துவான் வீரபத்திரப் பிள்ளை அவர்கள் எங்கே, இவர் எங்கே எனச் சிலநாள் இவரை மதிக்கா மலே இருந்த மாணவர்களில் நானும் ஒருவன். ஆனால் ஔவை அவர்களின் பாடம் நடத்தும் முறை புதுமை யானது அன்று நடத்தவேண்டிய பாடத்திற்கான குறிப்புகளை முன்பாகவே தேர்வு கொண்டல்லது பாடம் எடுக்கமாட்டார்; பாக்களை இசையோடு பாடுவார்; சொல் பிரித்து பொருள் விளங்கப் பாடுவார்; புதிய பாடம் எடுத்துக்கொள்வதற்கு முன்னர் பழைய பாடத்தை மாணவர் எந்த அளவு புரிந்துகொண்டுள் ளனர் என்பதை அறிந்துகொள்ள சில பல கேள்விகளை கேட்பார். அம்முறையில் ஒருநாள் அரிச்சந்திர புராணத் தில் வரும் "அவமேபுறம் அறைந்தமை" என்ற தொடரில் வரும் "அறைந்தமை" என்ற சொல் லுக்குச் சொல்லிலக்கணம் கூறுமாறு கேட்டார். அது வரை இலக்கணம் என்றால், இலக்கணத்திற்குப் பாட மாக வைத்திருக்கும் நூலில் ஒரு பக்கம் இரண்டு பக்கங் களை ஒப்பிப்பதோடு சரி; அதனால் சொல்லிலக்கணம் என்பது என்ன எனப் புரியாமல் விழித்தோம். அவர் "இடவழுவமைதி தனித்தன்மைப் பன்மை" என்பது தான் இதன் சொல்லிலக்கணம் என்றார்.

எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. "இடமாவது, வழுவாவது, அமைதியாவது தனித்தன்மைப் பன்மை யாவது" என விழித்தோம். அதன்பிறகு, இவரிடம் நல்ல தமிழ் அறிவு இருக்கிறது என்பதை உணர்ந்து மதிக்கத் தொடங்கினோம்.

வகுப்பில் ஒருநாள் "என்னிடம் தமிழ் கற்க விரும்பும் மாணவர்கள் எழுந்து நிற்கலாம்" என்றார், எல்லோரும் எழுந்து நிற்கவும், உடனே அவர் என்னிடம் படிப்பதானால், மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் கொடுக்க வேண்டும்; அதற்கு ஒப்புக் கொள்பவர் மட்டுமே நிற்கலாம் என்றார். நான், மா. கந்தசாமி, வ. வேதபுரி, பி. குப்புராவ் ஆகிய நால்வர் மட்டுமே நின்றாலும், மாலையில் வீட்டிற்குச் சென்றோம் பணத்தோடு; தமிழ் கற்க எந்த அளவு ஆர்வம் இருக்கிறது என்பதைக் கண்டுகொள்ளவே, ஐந்து ரூபாய் சம்பளம் என்றேன். சம்பளம் எதுவும் வேண்டாம், தமிழ் கற்றுத் தருகின்றேன்" என்றார்.

வகுப்பு தொடங்கிற்று. திருவையாறு திரு. உலகநாதம் பிள்ளை அவர்கள் இயற்றிய "கன்றும் கனி உதவும்" என்ற உரைநடை நூலைக் கொடுத்து, அதை மனப்பாடம் செய்து ஒப்புவிக்கப் "பணித்தார்". பாரி மகளிர் வரலாறு கூறும் சிறந்த உரைநடை நூல் இது. அது முடிந்ததும், "கார் நாற்பது", "களவழி நாற்பது" என்ற எளிய பொருள் விளக்கம் பெறவல்ல, அதே நிலையில் ஆழமாகவும் பொருள் நிறைந்த நூல்களைக் கற்றுத் தந்துவிட்டுப் பின்னர் ஒருநாள் தொல்காப்பியம், சொல்லதிகாரம் சேனாவரையம், ஒருநாள் திருக்குறள் பரிமேலழகர் உரை எனச் சொல்லித்தந்தார்.

பாடம் தொடங்குமுன்:

திருவிளங்கு பழமொழியும் சீர்விளங்கு
புலவர் பலர் சிறப்பத் தோன்றி
சருவிளங்கு பாக்கள் பல உரைகள்
பல ஆக்குதால் களவாம் வாய்மை
மருவிளங்கு தமிழ்மொழியின் மருங்கு
எழுந்தது என விளங்கும்
திருவிளங்கு வள்ளுவர் திருக்குறள் கண்டவர்
அடியாய்ச் சிரமேற்கொள்வார்.

என்ற பாடலை எல்லோருமாகப் படுவோம்.

1934-இல் பள்ளி இறுதி வகுப்பை முடித்ததும் அவர் தந்த பயிற்சியின் துணையால் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை நூல்களை நானே படிக்கத் தொடங்கினேன்.

1935இல் "காவிரி" என்ற தலைப்பில் கட்டுரை எழுதி, தஞ்சாவூர் கரந்தைத் தமிழ்ச்சங்கத் திங்கள் வெளியீ டாகிய "தமிழ்ப் பொழிலு"க்கு அனுப்பினேன். அது வெளிவந்த பிறகே ஆசிரியர்க்குத் தெரியும். இதுவே என் எழுத்துப் பணியின் தொடக்கம்.

ஊரில் "வாகீச பக்த ஜன சங்கம்" என்ற பெயரில் ஒரு தமிழ்ச்சங்கம் இருந்தது. அது மேலே கூறிய திருக்கோயில் திருவிழா நடைபெற்ற தைத்திங்களில் பத்துநாட்கள் உபயச் சொற்பொழிவு நடத்தி வந்தது. ஔவை அவர்கள் பங்கு கொண்டதும், அது புதுநடை போடத் தொடங்கிவிட்டது. தமிழ்நாட்டில் உள்ள திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் உள்ளிட்ட பல சமயப் புலவர்கள் வந்து சொற்பொழிவு ஆற்றுவார்கள். அவர்கள் பேசியன எல்லாம் கேட்ட எனக்கும் நாமும் ஏன் பேசக்கூடாது "என்ற உணர்வு எழவே, ஆசிரியர் அறிவுரையோடு" "சைவ இளைஞர் கள் முன்னிருக்கும் கடமைகள்" என்ற தலைப்பில் பேசினேன். அதுவே என் முதற் பேச்சு.

எங்கள் ஊரில் "பானு கவி மாணவர் தமிழ்ச் சங்கம்" என்ற பிறிதோர் அமைப்பும் இருந்தது. கம்ப இராமாயணத்தை ஆழ்ந்து படிக்காமலே பட்டிமன்றம், வழக்காடு மன்ற மேடைகளில் நின்று கொண்டு வெறும் சொல் சாலம் காட்டுவார் போல் அல்லாமல் ஆழமாகப் படித்து "வாலிவழக்கு" என்பன போலும் அரிய நூல்களைப் படைத்த அமரர் திரு. புரிசை முருகேச முதலியார் போன்றவர்கள் பானுகவியாரின் மாணவர்கள். அவர்கள் உருவாக்கியது அச்சங்கம். அதிலும் நான் பங்கு கொண்டவன்தான்; ஆண்டுதோறும் திருவத்தி

புரத்திற்கு வந்து செல்லும் ஞானியார் அவர்கள் அயர்ந்து உறங்கத் தொடங்கும்போது, அவர் உறங்கும் வரை அவர் கால்களைப் பிடித்துவிடும் பழக்கமுடைய என்னை, ஒருமுறை அவர் தலைமையில் ''மணிவாசகர் அளித்த திருவாசகம்'' என்ற தலைப்பில் பேசுமாறு பணித்துவிட்டார்கள். சங்க இலக்கியங்களை ஓரளவு கற்றவனே அல்லது, சமய இலக்கியம் படித்தவன் அல்லன். ஆனாலும் திருக்கோவையாறில் ஒருசில பாக்களைப் பள்ளியில் படித்தவன். என் தந்தையார், மார்கழி மாத விடியற் போதில் படிக்கும் திருவாசகப் பாக்களைக் கேட்டுக் கேட்டுச் சில பாடல்களை நினைவில் வைத்திருப்பவன். அதனால் தன் மகள், அவள் விரும்பும் இளைஞனோடு அவள் சென்றுவிட்ட போது, அவர்களைத் தேடிச்சென்றதாய், எதிரே வந்த ஓர் இள ஆணையும் ஓர் இள மகளையும் அணுகி, உங்களைப் போன்ற இருவர் இவ்வழியில் செல்வதைக் கண்டீர்களா எனக் கேட்க, அதற்கு அந்த இளைஞன், ஒன்று இருவரையும் பார்த்தேன் அல்லது இல்லை என்று கூறியிருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக ''என்னைப் போன்ற இளைஞரைப் பார்த்தேன்'' எனக் கூறிவிட்டுத் தன் பக்கத்தில் நிற்கும் தன் காதலியைப் பார்த்து ''இந்த அம்மா, வேறு யாரோ ஒருவரைப் பற்றி கேட்கிறார்களே! அவர்களைப் பற்றி உனக்குத் தெரியுமா'' எனக் கேட்டதாக வரும்.

''ஆளி அன்னானைக் கண்டேன் அயலே தூண்டா விளக்கனையாய்? என்மாயோ அன்னை சொல்லியதே'' என்ற பாட்டைப் பாடிவிட்டு எதிரில் இருவர் வர, ஆணை மட்டும் பார்த்துப் பெண்களைப் பார்க்காத அக்கால இளைஞரின் நாகரீகம் எங்கே? அழகிய இளமகளிரை — எங்கெல்லாம் காணலாம் என அலைபாயும் உள்ளத்தோடு, மகளிர் கல்லூரி வாயில் களிலும், திரையரங்குத் திடல்களிலும் காத்துக் கிடக்கும்

இன்றைய இளைஞரின் நாகரீகம் எங்கே எனக் கேட்டு முடித்தேன்.

அடுத்து "தந்தது உன்தன்னை; கொண்டது என் தன்னை" என்ற — திருவாசகத் தொடரை எடுத்துக் கொண்டு, தருதல் என்றால், கொடுப்பவன் தாழ்ந்து, வாங்கிடுவான் உயர்ந்து நிற்கும்போது ஆளவேண்டிய சொல், இங்கு 'தந்த உன்தன்னை' எனக் கூறியதன் மூலம், சிவனைத் தாழ்ந்தவனாகவும், தன்னை உயர்ந்த வனாகவும் மதித்துள்ளரே மணிவாசகர். இது ஏன் என்ற கேள்வியைக் கேட்டுவிட்டுப் பேச்சை முடித்துக் கொண்டேன்.

தலைமையுரையில், ஞானியார் அவர்கள் "கோவிந்தன் பேசிய நேரம் சிறியநேரம் என்றாலும், என் சிந்தனைக்கு மட்டுமல்லாமல் தலைவர் சிந்தனைக்கும் அரிய வேலை கொடுத்துவிட்டார்" எனக் கூறிப் பாராட்டினர்.

மற்றுமொரு நிகழ்ச்சி: நான் வித்துவான் பட்டம் பெறாத நேரம். ஆசிரியர்பால் பின்னர் தமிழ் கற்க வந்த கோமான் மா. வீ. ராகவன் அவர்கள், அந்த ஆண்டு வித்துவான் தேர்வு எழுதியிருந்தார். அந் நிலையில், திருவத்திபுரத்திற்கு வருகைதந்த, எங்கள் ஆசிரியரின் ஆசிரியர் கரந்தைக் கவியரசு ஆர். வெங்கடாசலம் பிள்ளை அவர்கள், ராகவன் தேர்வில் நன்றாக எழுதியுள்ளார் எனக் கூறினார். அதுகேட்ட ஔவை அவர்கள் என்னைச் சுட்டிக்காட்டி "இவன் அவனைவிடத் தெளிவாகப் படித்தவன்" என்று கூறிச் சென்றுவிட்டார்.

கவியரசு அவர்கள் என்னை அருகில் அழைத்து அணைத்துக் கொண்டு, இலக்கியத்திலும், இலக்கணத் திலுமாகச் சில கேள்விகளைக் கேட்டார். கூடுமானவரை

நல்ல விடையே கூறினேன், என் அறிவு எனக்குத் தானே தெரியும், மேலும் அவர் கேட்டால் விழிக்கவேண்டி நேரும், ஆசிரியர் நற்சான்றிற்கு மாசு நேரக்கூடும் என்ப தால் கவியரசை விட்டு ஓடி விடத் திட்டமிட்டு அவரிடம் ஓர் ஐயம் எழுப்பினேன். "தொல்காப்பியர் எழுவாய் வேற்றுமைக்கு இலக்கணம் கூறும்போது எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே" என்றார். அதாவது சொல் எவ்விதத்திரிபும் இல்லாமல் இருப்பது. அவ்வாறு கூறிய அவரே 'நீயீர்' என்ற எழுவாய்ச் சொல்லுக்கு இலக்கணம் கூறும் போது "நம்முன் திரிபெயர்" என்று கூறியுள்ளார். இது முன் கூறிய இலக்கணத்திற்கு முரண் ஆகாதா? நும்மின் திரி பெயராகிய நீயீர் என்பது பிற வேற்றுமைகளை ஏற்கும் போது மீண்டும் நும் எனத்திரிந்து, "நும்மை நும்மால்" என ஆவானேன் என்ற இரு ஐயங்களை எழுப்பினேன். அவர் சிந்திக்கத் தொடங்கி விட்டார். விட்டால் போதும் என ஓடிவிட்டேன்.

பள்ளியில் மற்றொரு தமிழாசிரியர் திரு. பாலசுந்தர நாயகர் அவர்கள் வித்துவான் தேர்வில் வெற்றி பெற்றார். அதற்கு ஒரு பாராட்டு விழா நடத்த தலைமை ஆசிரியரின் அனுமதி கேட்டோம்; அவர் மறுத்துவிட்டார். பானுகவி மாணவர் கழகமும் விழா நடத்த முன் வர வில்லை. அதனால், ஔவைத் தமிழ் மாணவர் கழகம் என்ற புதிய கழகத்தைத் தொடங்கி அவருக்கு மிகப் பெரிய பாராட்டு விழாவினை நடத்தினோம்.

ஓராண்டு கழிந்தது: 1936இல் முதலாண்டு விழா நடத்த முடிவு செய்தோம். விழாத் தலைமைக்கு மறைமலை அடிகளாரை அழைக்க முடிவு செய்தோம். ஆசிரியர் ஔவை அவர்கள் அவருக்கு கடிதம் எழுத, அடிகளார் ஒரு நாளைக்கு 100 வெண்பொற்காசுகள் (அதாவது ரூபாய்) தர

வேண்டும் என்றும் உணவு இவ்வகையில் இருக்க வேண்டும் என்றும் பதில் எழுதிவிட்டார்.

எங்களிடம் அவ்வளவு தொகை இல்லை; ஆனாலும் மறைமலையாரை அழைக்கும் ஆசையும் குறையவில்லை. ஒருநாள் ஆசிரியர் அவர்களிடமும் சொல்லாமல் பல்லாவரம் சென்று, அரைக்கிலோ கற் கண்டு, 2 சீப்புவாழைப்பழம், வெற்றிலை பாக்கு, மலர் மாலை இவற்றை வாங்கிக் கொண்டு, அடிகளார் மாளிகை சென்று ஒரு தட்டு வாங்கி, அதில் இவற்றை வைத்து எடுத்துக் கொண்டு அவரிடம் சென்று அவர் கையில் கொடுத்துவிட்டுக் காலில் வீழ்ந்து வணங்கி னேன். (நான் வணங்கியமுதல்வர் அவர்தான்)

வாழ்த்தி எழுந்திருக்கப் பணித்துவிட்டு: யார்? வந்தது ஏன் என வினவினார்: அழைக்க வந்தேன் என்றேன். ஔவைக்குக் கடிதம் எழுதி விட்டேனே என்றார். கையில் இருப்பது 200 வெள்ளிக் காசுகள் தாம் என்றாலும் தாங்கள் வந்து விழாத் தலைமை தாங்க வேண்டும் என வேண்டிக் கொண்டேன். ஒப்புக் கொண்டார்.

1936 மே 24. 25. 26 ஆகிய நாட்களில் திருவத்திபுரம் எங்கள் தெருவில், கோயிலை அடுத்த தெருவில் அவருக் காகப் பெரிய பந்தல் போட்டு விழாநடத்தினோம்.

வித்துவான் பட்டம் பெற்ற பின்னர், பி.ஓ,எல். பட்டம் பெற வேண்டும் என்ற ஆசை எழுந்தது. கல்லூரி சென்று படிக்காமல் வீட்டிலிருந்தே தேர்வு எழுதுவதானால் 3 ஆண்டு ஆசிரியராகப் பணி புரிந்திருக்க வேண்டும்; தேர்வுக்கு பதிவு செய்யும்போது ஆசிரியராக இருக்க வேண்டும் என்பது பல்கலைக் கழக விதி. அதனாலும் இரண்டாம் உலகப் போர் காரணத்தால் அறிஞர் அண்ணா உள்ளிட்ட கழகத்தவர்

அனைவரும் போரில் அமெரிக்கா, இங்கிலாந்து, ரஷ்யா அணிக்கு ஆதரவாக பிரச்சாரம் செய்ய முனைந்து விட்டனர். அதனாலும் பள்ளியில் என் பழைய தமிழ் ஆசிரியர் சென்ற அதே பள்ளியில் ஆசிரியராக 1942இல் சேர்ந்தேன் 1944 வரை பணி புரிந்தேன். அங்கும் தமிழ்ப்பணி தொடர்ந்தது.

பி. ஒ. எல் தேர்வில் முதல் பகுதி. பி. ஏ. வகுப்பிற் குரிய ஆங்கில இலக்கியம் இரண்டாம் பகுதி. தமிழ் வித்துவான் தேர்வு. மூன்றாம் பகுதி. திராவிடமொழி ஒப்பிலக்கணமும், தென்னிந்திய வரலாறும் (ஆங் கிலத்தில்) இரண்டாம் பகுதியை முன்னரே படித்து விட்டேன். முதல் பகுதியையும் முடித்து விட்டேன். மூன்றாம் பகுதியில் தென்னிந்திய வரலாற்றுக்குரிய நூல் களாகிய திரு. நீலகண்ட சாஸ்திரியாரின் சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு, திரு. கோபாலன் அவர்களின் பல்லவ வரலாறு, பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் தமிழர் வரலாறு ஆகிய ஆங்கில நூல்களை வாங்கிக் கொண்டேன். கால்டுவெல் ஒப்பிலக்கணத்தை இலண்டனில் உள்ள தம் நண்பர் மூலம் வாங்கித் தந்தார் ஆசிரியர்.

அவற்றைப் படிக்கும்போது கால்டுவெல் ஒப்பிலக் கணத்தையும், பி. டி. எஸ். அவர்களின் தமிழர் வர லாற்றையும் தமிழில் மொழி பெயர்த்தால் பி. ஒ. எல். படிக்கும் மாணவர்களுக்குப் பயன்படும் என எண்ணினேன்.

வேலூரில் பணிபுரிந்து கொண்டிருந்தபோது, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தலைவர், தாமரைச் செல்வர், அமரர் சுப்பையா பிள்ளை அவர்கள் சென்னையில், பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தலைமையில் 22-2-42 இல் நடைபெறும் நற்றிணை மாநாட்டில் பாலை

என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றுமாறும், ஆற்றும் சொற்பொழிவை அப்படியே எழுதித் தருமாறும் வேண்டினார். நானும் அது செய்தேன்.

அம்மாநாட்டினைத் தொடர்ந்து திரு. சுப்பையா அவர்களின் நட்பு தொடர்ந்தது. இலக்கியம் தொடர்பான நூல்களை எழுதித் தருமாறு அன்புக் கட்டளை இட்டார். "திருமாவளவன்" என்ற முதல் நூல் 1951இல் வெளிவந்தது. [என் முதல் மகனின் பெயரும் திருமாவளவன் என்பது குறிப்பிடல் நலம்] அதைத் தொடர்ந்து சங்ககாலப் புலவர் என்ற வரிசையில் 16 நூல்களையும் அரசர் என்ற வரிசையில் ஆறு நூல் களையும் வெளியிட்டார். புலவர் வரிசையில் முதல் நூல் 1952லும், அரசர் வரிசையில் கடைசி நூல் 1955லும் வெளிவந்தன.

தமிழ் எழுத்தாளர் உலகிற்கு அறிமுகமாகாத என் நூல்கள் இருபத்தைந்தை மூன்றாண்டு கால அளவில் வெளியிட்டு, எனக்குப் பெருமை சேர்த்த திருவாளர் பிள்ளை அவர்களுக்கு நான் என்றும் கடமைப் பட்டுள்ளேன்.

எழுத்துப்பணி தொடர, மலர் நிலையம், வள்ளுவர் பண்ணை, அருணா பதிப்பகம் என்ற வெளியீட்டாளர் மூலம் பல நூல்கள் வெளிவந்தன. அரசியல் பணிகளுக் கிடையே கால்டுவெல் அவர்களின் ஒப்பிலக்கண மொழி பெயர்ப்பு 1959-ல் வள்ளுவர் பண்ணை மூலம் வெளிவந்தது.

1990 ஏப்ரல் 15-ஆம் நாளன்று, என் ஐம்பதாவது நூலாக திரு. பி.டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் தமிழர் வரலாறு மொழிபெயர்க்கப் பெற்று, திரு. பிள்ளை அவர்களின் மருகர் திரு. இரா. முத்துக்குமாரசுவாமி அவர்கள் முயற்சியால் கழக வெளியீடாக வெளியிடப் பெற்றது. அவருக்கு நன்றி.

இப்போது (1921) அவர் பணிக்க திருவாளர் வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர் அவர்கள் Origin and Spread of Tamils, ['தமிழரின் தோற்றமும் பரவலும்'] என்ற நூல் மொழிபெயர்க்கப்பட்டு அச்சடிக்கப்பட்டு உள்ளது. திருவாளர் பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்களின் (Pre Aryan Tamil Culture) [ஆரியர்க்கு முந்திய தமிழர் பண்பாடு] ஆகிய நூலை மொழி பெயர்த்து முடித்துவிட்டு, அவரின் மற்றொரு நூலாகிய Stone Age in India [இந்தியாவில் கற்காலம்] என்ற நூலை மொழிபெயற்க எடுத்துக் கொண்டுள்ளேன். என் எழுத்துப்பணி தொடரும். குறள் பற்றி சங்க இலக்கியங்கள் பற்றி பல தலைப்புகளில் நூல் எழுதக் குறிப்பு எடுத்து வைத்துள்ளேன். "கல்வி கரையில; கற்பவர் நாள் சில" காலம் இடம் தந்தால் என் எழுத்துப்பணி ஓரளவேனும் முற்றுப் பெறும்.



# இணைப்பு: 2

## தமிழக அரசு வழங்குந் தமிழ்த் தென்றல்
## திரு. வி. க. விருது
## 26—8—1990

புலவர். கா. கோவிந்தன் அவர்கள் வட ஆர்க்காடு திருவண்ணாமலை சம்புவராயர் மாவட்டம் செய்யாற்றில் 1915 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15 ஆம் நாள் திரு. காங்க முதலியார் அவர்களுக்கும். திருமதி சுந்தரம் அம்மையாருக்கும் பிறந்தவர்.

உரைவேந்தர் ஒளவை துரைசாமியவர்களிடம் தமிழ்க் கல்வி பயின்ற புலவர் அவர்கள் தம் ஆசானைப்போலவே சங்க இலக்கியப் பெரும் புலமையும், சான்றாண்மையும் நிரம்பியவர். உலகப்புகழ் பெற்ற அறிஞர் கால்டுவெல் அவர்களின் ஒப்பரிய இலக்கண நூலாகிய திராவிட மொழிகள் ஒப்பிலக்கணத்தை மொழியாக்கம் செய்த பெருமையும், பி. தி. சீனுவாச அய்யங்காரின் தமிழர் வரலாறு எனும் பெரு நூலை இரண்டு தொகுதிகளாக மொழியாக்கம் செய்ததுடன் வரலாற்றுக் கருத்துக்களில் வழுவிய இடங்களிலெல்லாம் தமிழ்வளம் மிளிரச் செப்பம்செய்து வெளியிட்ட பெருமையும் புலவர் அவர்களையே சாரும்.

சட்ட மன்றத்தின் பேரவைத் துணைத்தலைவராகவும், பின்னர் தலைவராகவும் பொறுப்பேற்றுச் சிறப்புறச் செயலாற்றினார்.

''புலவர் கோவிந்தன்'' அவர்கள் தரணியில் மற்ற நாடுகள் எல்லாம் ஆட்சிமுறை அமைத்துக் கொள்ளாத காலத்திலேயே உலகமே பார்த்து வியக்கத்தக்க விதத்தில், அரசியல்நடத்தி வந்த தமிழகத்தின் அருமை பெருமைகளை, இலக்கிய வாயிலாகவும், வரலாறுகள் வாயிலாகவும் நன்றாக அறிந்தவர். இச்சட்டமன்றத்தின் துணைத்தலைவராகப் புலவர் அமர்வது நமக்கெல்லாம் நல்வாய்ப்பினை அளிப்பதாக அமைந்திருக்கிறது'' என்று முன்னாள் தமிழக முதல்வர் பேரறிஞர் அண்ணா அவர்கள் பாராட்டினார்கள்.

''தமிழ்நாட்டுச் சட்டமன்ற வரலாற்றில் பேரவைத் தலைவராக, அருந்தமிழ்ப்புலவர் இடம் பெறுவது இதுதான் முதன்முறையாகும். இலக்கியப் பெருமைவாய்ந்த மன்னர்களால் புகழப்பட்ட புலமை தமிழ்நாட்டின் அரியணையில் ஏற்றப்பட்டுப் புகழப்படுகிறது'' என்று மாண்புமிகு முதல்வர் அவர்கள் பாராட்டினார்.

''திருமாவளவன்'' ''சங்ககாலப் புலவர் வரிசை'' ''சங்ககால அரசர்வரிசை'' ''கால்டுவெல் ஒப்பிலக்கணத் தமிழாக்கம்,, ''நற்றிணை விருந்து,, ''குறுந்தொகைக் கோவை'', ''இலக்கிய வளர்ச்சி'', ''குறிஞ்சிக் குமரி'' ''நெய்தற்கன்னி'', ''முல்லைக்கொடி'', ''மருதநிலமங்கை'' ''பாலைச்செல்வி'', ''தமிழர்வாழ்வு'', போன்ற 50க்கும் மேற்பட்ட அரியபல நூல்களைப் படைத்துள்ளார்கள்.

புலவர்: கா. கோவிந்தன் அவர்களின் பெருந்தமிழ்ப் பணியைப் போற்றிப் பாராட்டும் வகையில் தமிழகஅரசு 1990ஆம் ஆண்டிற்குரிய திரு. வி. க. விருதை வழங்கி மகிழ்கிறது.''

நன்றி: தமிழக அரசு.

## இணைப்பு: 3

# மதுரை காமராசர் பல்கலைக் கழக 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' பட்டம் 7—10—1991

புலவர். கோவிந்தனார்

"திராவிட இயக்க வரலாற்றிலும், அத்துடன் இரண்டறக் கலந்து விட்ட தமிழகத்தின் ஐம்பது அறுபது ஆண்டுக்கால வரலாற்றிலும் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ள புலவர் கோவிந்தனார் அவர்களுக்கு நம் பல்கலைக்கழகம் இன்று 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்னும் உயரியபட்டம் வழங்கிப் பொன்னாடை போர்த்திப் பொற்பதக்கம் அளித்துப் பாராட்டுகிறது.

புலவர் கோவிந்தன் அவர்கள் சைவமும் தமிழும் தழைத்தோங்கிய குடும்பத்தில் 1915 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 15 ஆம் நாள், காங்கமுதலியாருக்கும் சுந்தரம் அம்மையாருக்கும் ஆறாவதுமகனாகப் பிறந்தனர். செய்யாறு உயர்நிலைப் பள்ளியில், உரைவேந்தர்; சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்களிடம் தமிழ்பயின்ற பெருமை இவருக்கு உண்டு இவருக்கு இளமையிலேயே அறிஞர் அண்ணாவுடன் நெருங்கிய தொடர்பு உண்டு.

1934 ஆம் ஆண்டு, பள்ளிப் படிப்பை முடித்தபின், கொஞ்சம் கொஞ்சமாகப் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் சுயமரியாதைக் கொள்கைகளினால் புலவர். கோவிந்தனார் ஈர்க்கப்பட்டார். 1937 ஆம் ஆண்டு நிகழ்ந்த இந்தி எதிர்ப்பு

இயக்கத்தில் தம்மையும் இணைத்துக் கொண்ட புலவர் அவர்கள், அன்றிலிருந்து முழுநேர அரசியலில் அடியெடுத்து வைத்தார்.

1936ஆம் ஆண்டில் 20வது வயதில் புலவர் அவர்கள் தம்முடைய மாமன் மகள் கண்ணம்மாவை மணந்தார். 1941 ஆம்ஆண்டில் அவர், வேலூர் நகரில் திருமலைதிருப்பதி தேவஸ்தானம் நடத்திய வேங்கடேசுவர் உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் பணியில் சேர்ந்தார். அக்காலத்தில் புலவர் அவர்கள் பல ஊர்களுக்குச் சென்று இலக்கியச் சொற்பொழிவுகள் ஆற்றிவந்தார். வித்துவான், பி. ஓ. எல். எம். ஏ., என்பன புலவர் அவர்கள் பெற்றுள்ள கல்விப்பட்டங்கள் ஆகும்.

அறிஞர் அண்ணா அவர்களால்துவக்கி வைக்கப்பட்டு, செய்யாறு நகரிலிருந்து வெளிவந்த 'போராட்டம்' வார இதழில் 'புலவர்' 'புலவர்கோ' என்ற புனைப் பெயரில் இலக்கியக்கட்டுரைகளையும், 'கேஜி' 'நளன்' என்றபுனைப் பெயர்களில் அரசியல் கட்டுரைகளையும் புலவர் அவர்கள் எழுதியுள்ளார்.

1962 ஆம் ஆண்டு நிகழ்ந்த பொதுத்தேர்தலில் புலவர் அவர்கள் செய்யாறு தொகுதியில் வேட்பாளராகப் போட்டி யிட்டு வெற்றி பெற்றார். சட்டமன்ற உறுப்பினராகப் பணியாற்றிய நாட்களில் (1962-67) சட்டமன்றத்திலேயே மிகுந்த கேள்விகளை எழுப்பியவர் என்ற சிறப்பைப் பெற்றவர் நம் புலவர் அவர்கள்.

1967 இல் அறிஞர் அண்ணா அவர்களின் தலைமையில் அமைந்த தி. மு. கழக ஆட்சியில் சட்டப் பேரவையின் துணைத்தலைவராகப் புலவர் அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார். பின், புலவர் அவர்கள் 1969, பிப்ரவரி 22ஆம் நாள்

ஒருமனதாகச் சட்டப் பேரவைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவர் துணைத் தலைவராகவும், தலைவராகவும் பணியாற்றிய கால கட்டத்தில்தான் பலமுக்கியமான சட்டங்கள் நிறை வேற்றப்பட்டன என்பது இங்கே சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

அரசியல்பணி புலவர் அவர்களின் புறப்பணி என்றால், தமிழ்ப்பணி அவரது அகப்பணி ஆகும். 'சங்க காலப் புலவர் வரிசை', 'சங்ககால அரசர் வரிசை', 'பண்டைத்தமிழர் போர்நெறி', கால்டுவெல் ஒப்பிலக்கணத் தமிழாக்கம்' முதலான நூல்கள் அவரது இலக்கியப்பணிக்குக் கட்டியம் கூறுவனவாகும். இலக்கியம், இலக்கணம், வரலாறு என்னும் முத்துறைகளிலும் மிகுந்த நூல்களைப் படைத்தவர் புலவர் கோவிந்தன் அவர்கள்.

தமிழால் வளர்ந்து, தமிழை வளர்த்து தமிழ்த் தொண்டால் உயர்வுபெற்ற புலவர் கோவிந்தனார் அவர்களுக்குத் ''தமிழ்ப் பேரவைச் செம்மல் (1986) என்ற பட்டத்தினை வழங்கி, மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பெருமைப்படுகிறது''.

நன்றி: மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் தமிழ்ச் செம்மல்கள் பேரவை.

❧ ❧ ❧

# வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி

| பக்க எண் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 14 | 4 | மேலுமோரு | மேலுமொரு |
| 14 | 9 | செல்லாடர் | சொல்லாடர் |
| 17 | 28 | அறவுடைமை யன்று | அறிவுடைமை யன்று |
| 18 | 7 | தத்க | தக்க |
| 29 | 11 | இவ்வுலகம் | அவ்வுலகம் |
| 29 | 13 | இம்முறை | இருமுறை |
| 32 | 1 | பின்னரே | முன்னரே |
| 32 | 1 | அரிய | ஆரிய |
| 33 | 4 | களைத்திருந் | களித்திருந் |
| 38 | 8 | பெருதல் | பெறுதல் |
| 38 | 14 | நம்பிருயிந்தனர் | தம்பியிருந்தனர் |
| 42 | 9 | முயற்றிதன் | முயற்சிதன் |
| 48 | 19 | பெந்தகையாளர் | பெருந்தகையாளர் |
| 68 | 3 | உண்ண | உள்ள |
| 69 | 16 | என்னும் | என்னா |
| 70 | 26 | அச்சமரு | அச்சமிகு |
| 71 | 22 | அரும்புனலின் | அடும்புனலின் |
| 73 | 10 | அப்பேறு | அம்பேறு |
| 77 | 24 | மருத்தவா | மடுத்தவா |
| 92 | 24 | ஏச்ச | எச்ச |
| 94 | 20 | கனவினால் | களவினால் |
| 95 | 11 | இல்லமால் | இல்லாமல் |
| 109 | 7 | அல்லது | அல்லாது |
| 116 | 18 | தலைவாரக | தலைவரா |
| 118 | 11 | பிறந்தனர் | பிறந்தவர் |

# எழிலகம் வெளியீடுகள்

## இலக்கியம்

**புலவர் கா. கோவிந்தனார் படைப்புகள்**

| | | |
|---|---|---|
| 1. | புண் உமிழ் குருதி | 10-00 |
| 2. | அடு நெய் ஆவுதி | 10-00 |
| 3. | கமழ் குரல் துழாய் | 10-00 |
| 4. | சுடர் வீ வேங்கை | 10-00 |
| 5. | வடு அடும் நுண் அயிற் | 10-00 |
| 6. | காவிரி | 20-00 |
| 7. | சிலம்பொலி | 12-00 |
| 8. | வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி | |
| 9. | மனையுறை புறாக்கள் | |

## வரலாறு

**ஆசிரியர் டாக்டர் கோ. திருமாவளவன்**

| | | |
|---|---|---|
| 1. | சம்புவரையர் | 10-00 |
| 2. | புலவர் வாழ்வும் பணியும் | 10-00 |
| 3. | History of the Cholas | |


# எழிலகம்

46, செல்வ விநாயகர் கோவில் தெரு,

திருவத்திபுரம்-604 407

MK Colour Process, Madras-14. Phone : 841478